Regd. M. No. 5934 Phone No. 21841

# ஜனசக்தி

JANASAKTHI

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்

(காலைப் பதிப்பு)

ஜ ன ச க் தி
(தின இதழ்)
சந்தா விபரம்
வருடம் 28-00 | 3 மாதம் 7-25
6 மாதம் 14-00 | 1 மாதம் 2-50
சந்தாவுக்கு பணம் அனுப்புவோர் மேற்கண்ட விலாசத்திற்கே அனுப்பக் கேட்டுக்கொள்கிறோம்.
நிர்வாகி,
ஜனசக்தி, 32, பிராட்வே, சென்னை-1.

மலர் 16 இதழ் 120] சென்னை 17-12-59 விகாரி௵ மார்கழி௴ 2௨ வியாழக்கிழமை [4 பக்கங்கள் 7 நயா பைசா

# சர்க்காருக்கு சர்வ கட்சித் தலைவர்களின் எச்சரிக்கை

## இம்மாத முடிவுக்குள் விலைகளைக் குறைக்காவிட்டால் உணவு இயக்கம் மேலும் தீவிரமாகும்

### பிரித்தாளும் சூழ்ச்சிக்கு கடும் கண்டனம்

சென்னை, டிச. 16—

இம்மாதம் இறுதிக்குள் விலைவாசிகளைக் குறைக்க சர்வகட்சிக் குழு சமர்ப்பித்த கோரிக்கைகளின் அடிப்படையில் சர்க்கார் நடவடிக்கை எடுக்காவிட்டால், கட்சி வேற்றுமை, கருத்து வேற்றுமை பாராமல் உணவுப் போராட்டத்தை மேலும் மேலும் தீவிரமாக நடத்துவோமென்று சர்வகட்சித் தலைவர்கள் சர்க்காருக்கு எச்சரிக்கை விடுத்தார்கள்.

அமைச்சர்களின் பிரித்தாளும் சூழ்ச்சியை கம்யூனிஸ்டு தலைவர் ப. ஜீவானந்தமும், தி. மு. க. தலைவர் சி. என். அண்ணாதுரையும் வன்மையாகக் கண்டித்துப் பேசினார்கள்.

தமிழரசுக் கழகத் தலைவர் வி. கே. குப்புசாமியும், சி. ஆர். வரதராஜனும் (நாம் தமிழர்), (பு. சோ. கட்சித் தலைவர்) ஆர். ராமநாதனும், தி.மு.க, தலைவர் என். வி. நடராசனும், தொழிலாளர் தலைவர்கள் ஏ. எஸ். கே. அய்யங்கார், எஸ். கிருஷ்ணமூர்த்தி ஆகியோரும், "சர்வ கட்சியினரும் தொழிற்சங்கங்களும் விலைக்குறைப்பு இயக்கத்தைத் தீவிரமாகவும் கூர் மழுங்காமலும் மேலும் மேலும் அதிக ஒற்றுமையுடனும் நடத்தவேண்டுமென்று தமிழகப் பொதுமக்களை அறைகூவி அழைத்தார்கள்.

இன்று மாலை 6 மணிக்கு மாநில விலைக்குறைப்பு சர்வகட்சிக் குழு சார்பில் கோகலே மண்டபத்தில் மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி எம்.சி. அவர்கள் கூட்டத்துக்கு தலைமை வகித்தார். தலைவர் கிருஷ்ணமூர்த்தி பேசுகையில், "உணவு இயக்கம் காந்திய முறையில் நடப்பதாகவும், கடந்த ஒரு மாத கால இயக்கத்தின் விளைவாக சர்க்காரை அசைய வைக்க முடிந்திருக்கிறதென்றும், சகல கட்சியினரும் தொழிலாளிகளும் ஒன்றுபட்டு தொடர்ந்து கிளர்ச்சி செய்தால், சர்க்காரைப் பணிய வைத்து மக்களுக்கு அனுகூலமான நடவடிக்கைகளை எடுக்கும்படி செய்ய முடியுமென்றும் கூறினார்.

#### என். வி. நடராசன்

அடுத்து தி.மு.க, தலைவர் திரு. என். வி. நடராசன் பேசுகையில், 'சர்வகட்சிக் குழு தலைவர்கள் 10 12-59-ல் முதலமைச்சரையும் உணவமைச்சரையும் பேட்டி கண்ட விபரங்களை விளக்கிக் கூறினார். மேலும் "நாம் கேட்கும் கோரிக்கைகளுக்கு ஆதாரங்களைக் கூறினோம். அமைச்சர் பக்தவத்சலம் டில்லி மீது தான் பழி போட்டார். தனி உணவு மண்டலம் இருக்குமானால் படி அரிசி 8 அணுவுக்குக்கூட கொடுக்கமுடியுமென்றும் அமைச்சர் கூறினார். 10 ஏக்கருக்கு மேல் உள்ளவர்களிடம் கொள்முதல் செய்ய வேண்டுமென்று கூறியதற்கு ஏன் 5 ஏக்கர்காரர்களிடம்கூட கொள்முதல் செய்வோமென்று கூறி விவசாயிகளை சர்வ கட்சிக்கு எதிராகத் திருப்பிவிட முயற்சித்தார். இந்தத் தடவை சர்வகட்சியினரிடம் அமைச்சர் அடக்கமாகப் பேசினார்.

அப்படியிருந்தும்கூட, கம்யூனிஸ்ட் வலையில் தி. மு. க. விழுந்துவிட்டதாக பிரித்தாளும் சூழ்ச்சியில் இறங்கினர். நாங்கள் மக்களுக்கு நன்மையான பிரச்சினையில் ஒன்றுபட்டிருக்கிறோம். கேரளத்தில் காங்கிரஸ் சேர்ந்துள்ள கூட்டணி யாருடைய நன்மைக்காக? கேரளத்தில் காங்கிரஸ் கட்சிக்கு இந்தத் தேர்தலில் தக்க புத்தி புகட்டப்படும். இந்த சர்வகட்சிக் குழு தேர்தலில் காங்கிரஸை முறியடிக்க முன்வருமென்று நம்புகிறேன்" என்றார்.

#### சி. ஆர். வரதராஜன்

திரு. சி. ஆர். வரதராஜன் (நாம் தமிழர்) பேசுகையில், "இந்த அறுவடையின்போது கொள்முதல் செய்யப்படுமா என்று நாங்கள் மந்திரிகளிடம் கேட்டோம். அதற்குப் பதில் இல்லை. டில்லி சர்க்கார் ரொட்டி தின்கிற சர்க்கார் சென்னை சர்க்கார் கல்யாண மாகாத சர்க்கார். இரண்டுக்கும் அரிசி விலைபற்றி தெரியாது. அதுபற்றி அக்கறையுமில்லை. இனியும் மக்களைச் சோதிக்க வேண்டாமென்று" சர்க்காரை எச்சரித்தார்.

#### ஆர். ராமநாதன்

திரு. ஆர். ராமநாதன் (பு. சோ. க.) பேசுகையில், "காங்கிரஸ் சர்க்கார் வடபாதிகளுக்கும் ராஜா சர்களுக்கும் வைரக் கடுக்கன்களுக்கும் ஜரிகைக் குல்லாக்களுக்கும்தான் இருக்கிறது. ஏழைகளுக்காக அல்ல. நாம் இயக்கத்தைத் தொடர்ச்சியாக நடத்தவேண்டும். இந்த மாதக் கடைசிக்குள் சர்க்கார் பதில் கிடைக்காவிட்டால், அவசியமானால் மற்ற மாகாணங்களில் நடந்ததுபோன்ற போராட்டம் நடத்த நேரிடலாம்" என்றார்.

#### வி. கே. குப்புசாமி

தமிழரசுக் கழகத் தலைவர் திரு வி. கே. குப்புசாமி பேசுகையில், "சர்வகட்சி இயக்கம்நடந்தபிறகு மந்திரிகளுக்கு ஆட்டம் கண்டிருக்கிறது. என்றாலும்இன்னும்'ஆகட்டும்,பார்க்கலாம், யோசிக்கிறோம்' என்றுதான் கூறுகிறார்களே தவிர நிச்சயம் நடவடிக்கை எடுக்கிறோமென்று அமைச்சர்கள் உறுதி சொல்லவில்லை. ஏழை மக்களின் பசித் தீ முன்னால் இவர்கள் என்ன கதி ஆவார்கள் என்பதை பல நாட்டு வரலாற்று நூல்களைப் பார்த்தால் புரியும்" என்றார்.

#### ஜீவானந்தம்

கம்யூனிஸ்ட் தலைவர் ஜீவானந்தம் பேசுகையில், "லோக சபையில் சர்க்காரின் போக்கையும், சென்னை சட்ட சபையில் சர்க்காரின் போக்கையும் ஒப்பிட்டார்.

"பண்டித நேருவின் உத்தரப் பிரதேச கரும்பு விவசாயிகள் தங்கள் குறைகளைப் போக்க வேண்டுமென்று நூற்றுக்கணக்கான தந்திகள் கொடுத்தார்கள். அதைச் சுட்டிக்காட்டி, விவாதிக்க வேண்டுமென்று ஒத்திவைப்பு பிரேரணை கொண்டு சென்றார்கள் கம்யூனிஸ்டு அங்கத்தினர்கள். நேரு கடுமையாக எதிர்த்தார். சபாநாயகரோ, 3 தந்திகள் அல்ல, 30 ஆனாலும், 30 லட்சம் வந்தாலும் சரி, ஒத்திவைப்பு பிரேரணையை அனுமதிக்க மாட்டேன் என்று நிராகரித்தார். இப்படி எத்தனை லட்சமானாலும் விட்டுத் தள்ளு என்ற போக்கு அங்கே.

"சென்னை சட்ட சபையில் என்ன நடக்கிறது? பக்தவத்சலம் இரண்டு விதமாக நடந்துகொள்ளுகிறார். ஒன்று, யோசிக்கிறோம் என்கிறார் அதேசமயத்தில் இமயத்தையும் சீனாவையும் காட்டி தி. மு. க.வைப் பிரிக்கப் பார்க்கிறார். திராவிடப் பிரிவினையைக் காட்டி கம்யூனிஸ்டுகளைப் பிரிக்கப் பார்க்கிறார்.

"கம்யூனிஸ்டுகளின் வலையில் தி. மு. க. விழுந்து விட்டதாகக் கூறி கத்தரிக்கோல் வேலை செய்யப் பார்க்கிறார்.

"தமிழகம்முழுவதும் செந்தூள் பறக்க ஒரு மாதமாக நடைபெற்ற சர்வகட்சி சூறாவளி இயக்கம் கண்டு பம்முவது போல் பம்மிக் கொண்டே, பிரித்து விட முயற்சிக்கிறார். இது கோரிக்கையை நிறைவேற்றும் வழியா என்று கேட்கிறேன்.

சட்ட சபையில் அன்பழகனின் தீர்மானத்தை பக்தவத்சலம் எதிர்த்தார். எதிர்ப்பதற்கு அதில் என்ன இருக்கிறது? இவர் என்ன செய்திருக்கவேண்டும்? "தீர்மானத்தை வாபஸ் வாங்குங்கள். உங்கள் அனைவரின் ஒத்துழைப் போடும் $3\frac{1}{2}$ கோடி மக்களின் வயிற்றுக்குச் சோறு போடுகிறேன்" என்று சொல்லியிருந்தால் அவரைச் சிங்கம் என்று சொல்லியிருக்கலாம். ஆனால் அப்படி இல்லை.

"இராமநாதபுரம் ஜில்லாவில் ஒரு கோடி ரூபாய்க்கு மிளகாய் வத்தல் கொள்முதல் செய்து, 4 கோடி ரூபாய்க்கு விற்றிருக்கிறார்கள். தானிய விலையைக் குறைத்தால் விவசாயிகள் பாதிக்கப்படுவார்களே என்று சொல்லுகிற பக்தவத்சலம் இதற்கென்ன பதில் கூறப் போகிறார்? அதனால்தான் சர்க்கார் கொள்முதல் செய்தால், மக்களுக்கும் விவசாயிகளுக்கும் நன்மை கிடைக்கும் என்கிறோம்.

அனைத்துக் கட்சிகளும் கூடுதல் விழிப்பாக, கூர் மழுங்காமல், ஒற்றுமையாக தீவிரமாக இயக்கம் நடத்தினால் பதுக்கல்காரன் பயப்படுவான். மதயானை போன்ற சர்க்காரும் பணிய நேரிடும், வாங்கும் சக்திக்கு ஏற்றவாறு விலைகள் இறங்காவிட்டால் இந்த நாட்டில் என்ன நடக்குமென்பதை சரித்திரம் சொல்லும்" என்று கூறி முடித்தார்.

#### அண்ணாதுரை

தி. மு. க. தலைவர் திரு. அண்ணாதுரையின் பேச்சு புதிய திருப்பமாக இருந்தது. சர்வ கட்சி ஒற்றுமை அடுத்த தேர்தலுக்கும் நீடிக்க வேண்டுமென்றார். அதற்கான பொதுத் திட்டத்தையும் கூறினார். ஒற்றுமைக்கு சர்வகட்சித் தலைவர்களுக்கும் வேண்டுகோள் விடுத்தார். அவர் பேசுகையில் குறிப்பிட்ட முக்கிய அம்சங்கள் பின்வருமாறு:

"என்னைச் சேர்ந்த தி. மு. கழகம் சர்வகட்சிக் குழுவில் இணைந்திருக்கிறது. நான் அதில் கலந்துகொள்ள வாய்ப்பு இல்லை. நான் கலந்துகொள்ளாததினால் தானே என்னவோ சட்டசபையில் மந்திரி பேசுகையில், கம்யூனிஸ்டு வலையில் விழுந்துவிடாதீர்கள் என்றார். அதனால்தான் நான் இக்கூட்டத்தில் கலந்து கொள்ள வந்தேன். நான் எந்த வலையிலும் விழுந்ததில்லை. எங்களைவலையில் விழுந்துவிட்டதாகக் கூறும்அவர்கள்,கேரளத்தில்எந்த வலையைப் பின்னிக் கொண்டிருக்கிறார்கள் என்று கேட்கிறேன்.

கம்யூனிஸ்டுகள் விழுங்கிவிடுவார்கள் என்கிறார்கள் மந்திரிகள். விழுங்கினால் என்ன? உருவம் பெரிதாகுமே தவிர, சிறிதாகாது. இது தேர்தலில் ஒரே உருவமாக வந்தால் என்ன செய்வது என்று மந்திரிகளுக்கு பயம் தட்டிவிட்டது போலும்!

காங்கிரஸுக்கு இன்று ஏற்பட்டுள்ள பலம், நமது பலஹீனத்தினால் ஏற்பட்ட பலம். அது இப்பொழுது குறைந்து வருகிறது. காங்கிரசைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. நமக்குள் ஒருவருக்கொருவர் பயப்படாமலிருந்தால் போதும். நண்பர் ஜீவானந்தம் பல புள்ளிவிபரங்களைச் சொன்னார். ஆனால் அன்பழகன் தீர்மானம் 23 ஓட்டு ஆதரவாலும் 83 ஓட்டு எதிர்ப்பாலும் தோற்றுப் போயிற்று. இந்த 23...83 கணக்கு மாறினால்தான் சோறு கிடைக்கும். நாம் ஒருவருக்கொருவர் நெருங்கி வருவதற்கு வெட்கப்பட வேண்டியதில்லை. இந்தக் கணக்கை மாற்ற நாம் ஒன்றுபட வேண்டும்.

ஹரிஜனங்களுக்கு நன்மையான விஷயத்தில் நாம் காங்கிரஸ் கட்சியுடன் ஒத்துழைத்தோம். ஆனால் உணவு விஷயத்தில் அது போன்ற பெருந்தன்மை காங்கிரஸுக்கு இல்லை.

பல கட்சிகளைச் சேர்ந்த நாம் நடத்தும் பாட்டுக் கச்சேரி முழுவதும் காங்கிரஸை ஒழிப்பதாகவே இருக்கவேண்டும். இன்று நாம் 23 ஆக இருக்கிறோம். அவர்கள் 83 ஆக இருக்கிறார்கள். இதை வெட்கத்தோடும் வேதனையோடும் சொல்லுகிறேன்.

தி.மு.க.வைத் தோற்கடித்து கம்யூனிஸ்ட் கட்சியின் ஆட்சி ஏற்படுமேயானால் நான் பிரிவினையை வற்புறுத்துவேனே தவிர கம்யூனிஸம் வேண்டாமென்று சொல்ல மாட்டேன். தேவிகுளம் போராட்ட சமயத்தில் ஒற்றுமை வளருமென்று எதிர்பார்த்தேன். வளரவில்லை. இனி வளருமென்று எதிர் பார்க்கிறேன். நண்பர் ஜீவானந்தம் சொன்னார், 'பக்தவத்சலம் கத்தரிக்கோல் வேலை செய்வதாக' ஆனால் பக்தவத்சலத்தின் கத்தரிக்கோல் அவ்வளவுதான் இருக்குமென்று எனக்குத் தெரியும்.

நான் பார்க்கிற குறிகளின்படி இன்னும் 2 மாதங்களுக்குள் சர்வ கட்சி கோரிக்கைகளை சர்க்கார் அமுல் நடத்துமென்று நம்புகிறேன்.

காங்கிரஸ் ஆட்சியில் மனிதன் தேவைப்பட்ட சமயத்தில் சாப்பிட முடியவில்லை. கிடைத்த சமயத்தில் கிடைத்ததைச் சாப்பிடுகிறான். புண்ணாக்கையோ, கடலையையோ அல்லது சர்க்கார் தரும்புள்ளிவிபரங்களையோதான் தின்ன வேண்டியிருக்கிறது.

உணவு கிடைக்காத மக்கள் என்ன செய்வார்கள் என்பதை பிரெஞ்சு,ரஷ்யவரலாறுகளையோ அது பிடிக்காவிட்டால் பர்தோலி வரலாற்றையோ படிக்கட்டும்.

உணவுப் பிரச்சினைக்கு வருமாறு நான் அழைக்கிறபோது நாட்டுப் பிரிவினைக்கு வருமாறு அழைக்கவில்லை. அனைவரும் கூட்டாக நின்று காங்கிரஸை முறியடிப்போம்" என்றார். தேர்தல் கூட்டணி பற்றியும் தேர்தல் கோஷம்பற்றியும் திரு அண்ணாதுரை பேசிய விபரத்தை தனியாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. கூட்டத்தில் பேசுவதாக இருந்த எம். ஆர். வெங்கடராமன் நேரமின்மையால் பேசவில்லை.

---

இந்தியாவுக்கு விஜயம் செய்துள்ள சோவியத் எழுத்தாளர் தூதுக்குழுவினர் பாரத கலாச்சாரத்துறை அமைச்சர் ஹூமாயூன் கபீருடன் அளவளாவுகின்றனர்.

---

## கவர்னர் உரை 'பகிஷ்காரம்' சட்டசபை உரிமையைப் பாதிப்பதாகாது

### கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் கல்யாணசுந்தரம் கருத்து

சென்னை, டிச. 16—

சட்ட மன்றத்தில் கவர்னர் உரையின்போது வராமல் "பகிஷ்காரம்" செய்ததாக தி. மு. க. உறுப்பினர்களுக்கு எதிராக உரிமைப் பிரச்சினை பூர்வாங்க முறையில் இன்று ராஜ்ய சட்டசபையில் வந்தபோது கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் எம். கல்யாணசுந்தரம் பேசினார்.

தி. மு. க. உறுப்பினர்கள் கவர்னர் உரையின் போது வராமல் இருந்தது எந்த விதத்திலும் சட்ட மன்றத்தை அவமதிப்பதாகாது என்பதை அவர் விளக்கினார்.

அவர் மேலும் கூறியதாவது: ஒரு விதத்தில் பார்க்கும்போது இந்த உரிமைப் பிரச்சினைக்காக சர்க்கார் கட்சியினருக்கு தி. மு. க. தலைவர் நன்றி கூறலாம் என்றுகூட எனக்குத் தோன்றுகிறது. கவர்னர் உரையின்போது தாங்கள் வராமல் இருந்தபோது விஷயம் இவ்வளவு பெரிதாக எடுத்துக்காட்டப்படும் என்று தி. மு. க. நண்பர்கள் கூட நிச்சயமாக கருதியிருக்க மாட்டார்கள்.

என்னைப் பொறுத்தமட்டில் கவர்னர் உரையை தி. மு. க. நண்பர்கள் பகிஷ்காரம் செய்தது சர்வ சாதாரணமான விஷயம். இதில் புரட்சி எதுவும் இல்லை. இதற்கு முன்னால் இம்மாதிரி நடந்திருக்கிறது. இந்த சட்ட சபை முதல் கூட்டத்தின் போது எனது கட்சியினரும், சோஷலிஸ்டுகளும், பிரஜா சோஷலிஸ்டுகளும் கவர்னர் உரையை பகிஷ்காரம் செய்தனர். அப்போது தி. மு. க. உறுப்பினர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டு உரையைக் கேட்டார்கள்.

பின்னர் ஓரிரு முறை கவர்னர் உரையை அவர்கள் பகிஷ்காரம் செய்தனர். அப்போது உரிமைப் பிரச்சினை எழவில்லை.

ஒரு குறிப்பிட்ட நடவடிக்கை பற்றி தமது எதிர்ப்பைத் தெரிவிக்க பகிஷ்காரம் செய்வதை திரு. சுப்பிரமணியம் தவறு என்று சொல்லவில்லை. இந்த முறையில் எதிர்ப்பைக் காட்ட ஜனநாயக உரிமையை உபயோகித்து பகிஷ்காரம் செய்வது இரண்டாவது அல்லது மூன்றாவது முறையாக நடந்தால் அதை உரிமையைப் பாதிக்கும் பிரச்சினையாகக் கருதுவானேன். இதை பெரிதுபடுத்துவானேன்!

#### கம்யூனிஸ்டு கட்சி நிலை

வடக்கே இருப்பவர் கவர்னராக வரக்கூடாது என்பதை என் கட்சி ஒப்புக்கொள்ளவில்லை. பதவிக்குத் தகுதியானவர் என்ற முறையில் இமயம் முதல் குமரி வரை யார் வேண்டுமானாலும் கவர்னராக நியமிக்கப்படலாம்.

வடக்கு தெற்கை அடிமைப் படுத்துகிறது என்பதையும் என் கட்சி ஒப்புக்கொள்ளவில்லை.

ஏராளமான அதிகாரங்கள் மத்திய சர்க்காரிடம் குவிந்து விடுவதால் மாநில சுதந்திரம் பறிக்கப்படுகிறது என்பது என் கட்சியின் பிரத்தியட்சத் துணிபு.

அந்த அதிகாரங்கள் மத்திய சர்க்காரிடம் குவிந்து வருவது இந்த நாட்டிலுள்ள எல்லா ராஜ்ய மக்களையும்தான் பாதிக்கும். எல்லா மாநில மக்களும் தான் இதை விரும்பவில்லை.

எனது தி.மு.க. நண்பர்களுக்கு எப்போதும் நான் சொல்லுவது இதுதான். தமிழர்களை வேறு யாரும் அடக்கி ஆளுவது இயலாது. தமிழன் யாருக்கும் அடிமையாக மாட்டான். கட்ட பொம்மன் பரம்பரையை கட்டுப் படுத்துவதோ அடிமைப்படுத்துவதோ யாருக்கும் இயலாத காரியம்.

இதெல்லாம் பொதுப்படையான பேச்சு.

#### சட்ட பிரச்சினை

குறிப்பாக, கவர்னர் உரையின் போது தி. மு. க.வினர் சபைக்கு வராமல் இருந்தது இந்த சட்ட சபையின் உரிமைகளை பாதிப்பதாகுமா என்பதுதான் பிரச்சினை. நான் "இல்லை" என்கிறேன்.

அரசியல் சட்டப்படி கவர்னர் "சட்ட மன்றத்தின் (Legislature) ஒரு பிரிக்க முடியாத அங்கம் என்று கூறப்பட்டது.

"இரண்டு சபைகள் இருக்கும் மன்றமானால் இரண்டு சபைகளும் கவர்னரும் அடங்கிய அமைப்பே சட்ட மன்றம் என்பது அரசியல் சட்ட ஷரத்து. இதை எப்படி வியாக்கியானம் செய்யவேண்டும் என்பதில் தான் கருத்து வேறுபாடு எழுகிறது.

சில சமயங்களில் சட்ட சபைகள் தற்காலிகமாக ஒத்திவைக்கப்படுகின்றன. சில சமயங்களில் கலைக்கவும் படுகின்றன. இம்மாதிரி சமயங்களில் அவசரச் சட்டம் இயற்ற நேரிடுகிறது. பிறகு இந்த அவசரச் சட்டம், சட்ட மன்றத்தின் முன் வைக்கப்படும்.

இம்மாதிரி சில சமயங்களில் சட்ட சபையின் அதிகாரங்களை கவர்னர் தமது சொந்த முறையில் செய்ய நேரிடலாம். இதை உத்தேசித்து அவருக்கு அதிகாரம் கொடுக்கும் வகையில் சட்ட மன்றத்தில் அவரும் ஒரு பகுதியாகக் கருதப்படுகிறாரே தவிர, சட்ட மன்றத்தின் ஒரு உறுப்பினருக்கு உள்ள உரிமைகள் அவருக்கு இருப்பதாகக் கருத முடியாது.

விளக்கமாகச் சொல்லப் போனால் கவர்னர் தமது உரையை நிகழ்த்துகிறார். உடனே அது சட்டசபையின் நடவடிக்கையாக ஆகிவிடவில்லை. சட்ட சபையின் முன் கவர்னர் உரை வைக்கப்பட்ட பிறகுதான் சபை நடவடிக்கையின் பகுதியாக அது கருதப்படுகிறது.

#### ராஜ்யத் தலைவர்

கவர்னர் ராஜ்யத்தின் தலைவர் என்று கூறப்பட்டது. ராஜ்யத் தலைவருக்கு அவமரியாதை செய்வதாக விளக்கமும் கூறப்பட்டது. ராஜ்ய நிர்வாகப் பொறுப்பு கவர்னரிடம் இருக்கிறது என்பதை யாரும் மறுக்கவில்லை. பல அலுவல்கள் அவருக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ளன. நிர்வாக அலுவலும் ஒன்று.

ஆனால் சட்டக் கண்கொண்டு பார்க்கும்போது அரசியல் சட்டத்தில் எந்தப் பிரிவிலாவது "ராஜ்யத் தலைவர் கவர்னர்" என்ற பதப் பிரயோகம் இருக்கிறதா என்று பார்த்தால் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஒரு இடத்தில் கூட இல்லை.

#### கவர்னர் யார்?

அரசியலமைப்பு சட்டப்படி கவர்னர் ஜனாதிபதியால் நியமனம் செய்யப்படுகிறார். அவர் ஜனாதிபதியின் விருப்பத்தை எதிர்பார்த்து பதவியிலிருக்க வேண்டும். கவர்னர் இந்த சபையால், மன்றத்தால் நியமிக்கப்படுபவர் அல்ல. ஆகவே அவருக்கு அவமரியாதை என்று கருதப்படும் ஒரு சம்பவம், உண்மையிலேயே இந்த சபைக்கு அப்பாற்பட்டதாகும். கவர்னரை நியமனம் செய்யும் ஜனாதிபதியை ஒருவேளை பாதிப்பதாக இருந்தாலும் கூட, இந்த சபைக்கு சம்பந்தம் எதுவும் இருக்கக் காரணம் இல்லை. உரிமைப் பிரச்சினை எழுவதானால் ஒருவேளை பார்லிமெண்டில் வரலாம், அதுகூட சந்தேகத்திற்கிடமானதே.

கவர்னர் ஒருநாளும் சட்ட மன்றத்தின் உறுப்பினராக மாட்

(4-ம் பக்கம் பார்க்க)

---

## இரண்டு லட்சம் ரூபாய்

### காங்கிரஸ் தேர்தல் நிதிக்கு கேரள கவர்னராட்சி நன்கொடையா?

#### புதிய பஸ் வாங்கும் பேரத்தில் ஊழல்

திருவனந்தபுரம், டிச. 12—

அண்மையில் கேரள சர்க்கார் காரியாலயத்தில் கேரள டிரான்ஸ்போர்ட் போர்டு கூட்டம் நடைபெற்றது. கேரள ராஜாங்கப் போக்குவரத்துக்கு 60 பன்ஸ் பஸ்கள் வாங்குவது என்று அவசர அவசரமாகத் தீர்மானம் செய்யப்பட்டதாம்.

காங்கிரஸ் தேர்தல் நிதிக்கு இரண்டு லட்சம் ரூபாய் அளிக்கப்படும் என்று வாக்குறுதியின் பேரிலேயே இந்த முடிவு எடுக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. பிரபல காங்கிரஸ் தலைவர்கள் தலையீட்டின் விளைவாகவே இந்த பஸ்கள் வாங்கும் முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது. கேரளக் கலவரத்தில் குடும்பத்தோடு ஈடுபட்ட ஒரு முதலாளிக்கு இந்த பேரத்தில் 6 லட்சம் ரூபாய் கிடைக்குமாம். இதில் ரூ. 2லட்சம் தான் காங்கிரஸ் தேர்தல் நிதிக்கு அளிக்கப்படுவதாகத் தெரிகிறது.

கம்யூனிஸ்ட் மந்திரிசபை ஆட்சிக் காலத்தில் வாங்கிய பஸ்களில் பெரும்பாலும் லேலண்டு கம்பெனியாருடையவை. இவை மிகவும் சிறந்தவை என்பது நிபுணர்கள் கருத்து. பாக்குவரத்துத் துறையின் அனுபவமும் இதுவே. ஆனால் பன்ஸ் பஸ்கள் வாங்குவதற்குக் காரணம் இந்த ஊழல் திட்டமே எனத் தெரிகிறது. போக்குவரத்து போர்டுக்கு தொழிலாளர் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப் படுவதற்கு முன்பே அவசர அவசரமாக இந்த பேரம் நடக்கிறது என்று பரவலாகப் பேசப்படுகிறது.

---

## தேர்தல் கூட்டணிக்கு அண்ணாதுரை அழைப்பு

### மாநிலங்களுக்கு கூடுதல் அதிகாரமே திட்டமென்கிறார்

#### பிரிவினைப் பேச்சையும் ஒத்திப் போடுவதாகக் கூறுகிறார்

சென்னை, டிச. 16—

இன்று மாலை கோகலே மண்டபத்தில் நடைபெற்ற விலைக் குறைப்பு சர்வகட்சிப் பொதுக் கூட்டத்தில் தி. மு. க. தலைவர் திரு. அண்ணாதுரை தேர்தல் கூட்டணிபற்றி பின்வரும் கருத்துக்களை வெளியிட்டார்.

"சட்டசபையில் காங்கிரஸ் கட்சிக்கு அதிக எண்ணிக்கையும் எதிர்க்கட்சிகளுக்கு குறைவான எண்ணிக்கையும் இருப்பதினால் தான் மக்களின் குறைகளைத் தீர்க்க முடியாமல் இருக்கிறது. மாநிலம் சம்பந்தப்பட்ட எந்தக் காரியத்துக்கும் மத்திய சர்க்காரையே மாநில சர்க்கார் எதிர்பார்த்துக் கொண்டிருக்கவேண்டி யிருக்கிறது. நண்பர் ஜீவானந்தம் சொன்னார், ஒரு கோடி ரூபாய்க்கு மிளகாய் வத்தல் கொள்முதல் செய்து 4 கோடி ரூபாய்க்கு விற்றிருக்கிறார்கள் என்று. இது கொள்ளை லாபம்தானே! இதைத் தடுக்க அரசாங்கமே கொள்முதல் செய்து விற்கக்கூடாதா? அரசாங்க வர்த்தகத்துக்குக்கூட மாநில சர்க்கார் மத்திய சர்க்காரின் கட்டளையையே எதிர்பார்த்துக் கிடக்கவேண்டியிருக்கிறது.

கேரளத்தில் முன்பிருந்த முற்போக்கு சர்க்கார் கொண்டு வந்த நிலச் சட்டத்தை மத்திய சர்க்கார் அங்கீகரிக்கவில்லை. கேரளத்தை ஆணையிட்டு நான் சொல்லுகிறேன். மாநிலங்களுக்கு கூடுதல் அதிகாரம் கிடைத்தாக வேண்டும். கேரளத்தில் ஆட்சிபுரிந்த கம்யூனிஸ்டுகளே இந்தத் தேர்தலிலும் ஜெயிப்பார்கள் என்று ஜோசியம் சொல்லுகிறேன் ஜெயிக்க வேண்டுமென்றும் விரும்புகிறேன்.

#### கூடுதல் அதிகாரம் மாநிலங்களுக்கு வேண்டும்

மாநிலங்களுக்கு கூடுதல் அதிகாரம் கிடைக்கத்தக்க வகையில் அரசியல் சட்டத்தை திருத்திய வேண்டும். நாமெல்லாரும் உள்ளத்தைத் திறந்து பேச வேண்டிய காலம் வந்துவிட்டது.

#### தேர்தல் கூட்டணி

தேர்தல் சமயத்தில் சகல கட்சிகளும் சேர்ந்து மாநிலங்களுக்கு கூடுதல் அதிகாரம் பெறுவது எப்படி என்று ஆராய வேண்டும். நான் வேண்டுமானால் பிரிவினையை அப்பொழுது வற்புறுத்தவில்லை. சர்வ கட்சியினரும் இதற்கு வேறு வழி கூறினால், அதை ஆராயமாட்டேனென்று நான் சொல்லவில்லை ஆராய்கிறேன்.

தேர்தலின்போது மாநிலங்களுக்குக் கூடுதல் அதிகாரம் என்ற ஒரே கோஷத்தை முன்வைத்து சகல கட்சிகளும் அணி சேர்ந்து போட்டியிட்டு காங்கிரசை முறியடிக்கவேண்டும். இது ஒன்று தான் என் இதயகீதமாக

(4-ம் பக்கம் பார்க்க)

ஜனசக்தி

சென்னை 17-12-1959

## உணவு இயக்கமும் சர்க்காரின் தயக்கமும்

கடந்த இரண்டு மாத காலமாக நடந்து வரும் சர்வகட்சி விலைவாசிக் குறைப்புக் கிளர்ச்சி, நேற்று நடந்த சட்டசபை விவாதத்துடன் ஒரு முக்கியமான கட்டத்தை அடைந்துள்ளது.

சர்வகட்சி அணிவகுப்பில் காங்கிரஸ், சுதந்திரா, பி. சோ. கட்சிகள் தவிர பிற எல்லா அரசியல் கட்சிகளும் பங்கு கொண்டுள்ளன என்பதை இப்போது நாடு நன்கறியும். விலைவாசிக் குறைப்புக்கான கிளர்ச்சியை, மாநில சர்வகட்சிக் குழுவும், ஒவ்வொரு மாவட்டத்திலும், நகரங்களிலும் கிராமங்களிலும் ஏற்பட்டுள்ள நூற்றுக்கணக்கான சர்வகட்சித் துணை அமைப்புகளும் விடாது நடத்தி வந்துள்ளன. நவம்பர் 15 முதல் 22 வரை ஒரு விசேஷ வாரமாக நடத்தப்பட்டு ஊர்வலங்களிலும் பொதுக்கூட்டங்களிலும் லட்சோப லட்சம் மக்கள் திரண்டு சர்வகட்சிக் குழு முன் வைத்துள்ள ஆலோசனைகளைக் கேட்டனர், ஆதரவு தந்தனர். இந்த அடிப்படையில் விலைவாசிக் குறைப்பு நடவடிக்கைகளை எடுத்தே தீர வேண்டுமென்று வலியுறுத்தும் தீர்மானங்கள் ஒவ்வொரு சிறு கூட்டத்திலிருந்தும் முதலமைச்சர் காரியாலயத்திற்குச் சென்று குவிந்தன. இத்தகைய விரிவான மக்கள் கிளர்ச்சியை அலட்சியப்படுத்துவது சர்க்காருக்கு எளிதாக இல்லை.

மாநில சர்வகட்சிக் குழுவும் ஆரம்பத்திலிருந்தே உடனடி காரிய சாத்தியமான, ஜனநாயகரீதியான நடவடிக்கைகளையே சர்க்காருக்கு சமர்ப்பித்த அறிக்கையில் வலியுறுத்தியிருந்தது. உணவு விலைவாசிகளைக் குறைத்தால் பிற பொருட்களின் விலையும் குறையும்; உணவு விலைவாசிகளைக் குறைக்க, சர்க்காரே மலிவான விலையில் நியாய விலைக் கடைகள் மூலம் நகரங்கள் மேஜர் பஞ்சாயத்துகளின் பாதியளவுத் தேவைகளையாவது பூர்த்தி செய்ய முன்வர வேண்டும்; இதை சர்க்கார் கண் துடைப்புக்காக இன்றி உண்மையாக நடத்த வேண்டுமென்றால் போதிய ஸ்டாக் கையில் வைத்துக் கொள்ள வேண்டும்; இவ்வாறு ஸ்டாக்கை உறுதிப்படுத்திக் கொள்ள மொனொபலிக்கையாக நடவடிக்கை எடுத்து சுமார் 5 லட்சம் டன்களாவது அதிக நிலம் வைத்திருப்பவர்களிலிருந்து கொள்முதல் செய்ய வேண்டும்; 10 ஏக்கருக்கு மேல் நிலம் வைத்திருப்பவர்களிடம் தான் போக வேண்டுமே தவிர 10 ஏக்கருக்குக் கீழ் நிலம் வைத்திருப்பவர்களிடம் கொள்முதலுக்குப் போகக்கூடாது; ஆயிரக்கணக்கான ஏக்கர்கள் வைத்திருக்கும் சில பெரிய மடாலயங்கள், பெரிய தேவஸ்தானங்களிடம் கொள்முதல் செய்தாலே 2 அல்லது 3 லட்சம் டன் தானியம் கிடைக்கும்; நியாயவிலைக் கடைகளில் படி அரிசி 12 அணாக்கு இவ்விதம் கிடைக்கச் செய்து, வெளி மார்க்கெட்டு விலைகளைக் கட்டாயம் குறைத்து விட முடியும். இவ்வாறு திட்டவட்டமான ஆலோசனைகளைத் தான் மாநில சர்வகட்சிக் குழு முன் வைத்தது. இந்த நியாயமான கோரிக்கைகளைப் புறக்கணிப்பதும் சர்க்காருக்கு எளிதாக இல்லை.

கிளர்ச்சியுடன் நிற்காது மீண்டும் ஒரு முறை -12-59 அன்று சர்வ கட்சிக் குழுவின் சார்பாக தூது கோஷ்டி முதலமைச்சரையும் உணவமைச்சரையும் சந்தித்து மேற்படி கோரிக்கைகளை வலியுறுத்தியது. அந்தச் சந்திப்பில் "நாங்களும் கொள்முதல் செய்ய வேண்டிய அவசியத்தை அங்கீகரிக்கிறோம். அந்தப் பாதையில் தான் சிந்திக்கிறோம். எவ்வளவு, எவ்வாறு கொள்முதல் செய்வது என்பதை ஆராய்ந்து கொண்டிருக்கிறோம். சர்வகட்சிக் குழுவின் மஜரில் கண்டுள்ள ஆலோசனைகளை கவலையுடன் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டுள்ளோம். இதர ஆலோசனைகளும் வந்துள்ளன. நியாய விலைக் கடைகளை நீடிப்பது அவசியமென்றே நினைக்கிறோம். மத்திய சர்க்கார் எவ்வளவு தானியம் கொடுக்க முடியுமென்பது பதில் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். இம்மாத இறுதிக்குள் கொள்முதல் செய்வது குறித்து எங்களுடைய முடிவைத் தெரிவித்து விடுகிறோம்" என்று பொறுப்புள்ள அமைச்சர்கள் தூதுகோஷ்டியினருக்கு வாக்களித்தார்கள்.

சட்டசபையில் கவர்னர் உரையின் மீது நடந்த விவாதத்திற்கு பதிலளிக்கையிலும் கொள்முதல் செய்வது பற்றி கவலையெடுத்துள்ளதாகவே மந்திரியின் பதில் இருந்தது. மீண்டும் நேற்று சட்டசபையில் எதிர்க்கட்சிகள் முன் வைத்த உணவு விலை குறைப்பு சம்பந்தமான தீர்மான விவாதத்திற்கு குறிப்பாகத் தோழர் கல்யாணசுந்தரம் கொடுத்த திருத்தத்திற்கும் பதிலளிக்கையிலும் எதிர்க்கட்சிகள் வலியுறுத்தும் நடவடிக்கைகளைப் பரிசீலித்து முடிவு கூறுவதாகப் பேசியிருக்கிறார் உணவமைச்சர்.

அதிக நிலம் படைத்தவர்களிடம் கொள்முதல் செய்வது விலைவாசிக் குறைப்பு நடவடிக்கைகள் வெற்றி காண்பதற்கு ஜீவநாடியான பிரச்சினை. இதில் தங்களுடைய ஒப்புதலைத் தெரிவிக்க இம்மாத இறுதிவரை அவகாசம் கேட்கிறார்கள் அமைச்சர்கள். அந்த அவகாசத்தை அவர்களுக்கு சர்வகட்சிக் குழு அளிக்க முடிவு செய்துள்ளது.

மக்களின் கிளர்ச்சி சர்க்காரின் கொள்கையில் ஒரு மாற்றத்தைக் கொண்டுவரும் எதிர்பார்ப்புகளை ஏற்படுத்தியுள்ளது தெரிகிறது. இரண்டு மாதங்களுக்கு முன்புதான் கொள்முதல் இனிக் கிடையாது, அடுத்த சம்பா அறுவடை குறித்து பிறகு பார்க்கலாம் என்று கூறியதும் இதே உணவமைச்சர்தான்.

ஆயினும், இந்த மந்திரி சபையில் அதிக நிலம் படைத்தவர்களின் பிடிப்பு எவ்வளவு அழுத்தமாயிருக்கிறதென்பதும் மக்களுக்குத் தெரியாமலில்லை. நேற்று நடந்த சட்டசபை விவாதத்தில் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த பலர் கொள்முதலை எதிர்த்திருக்கின்றனர். கவர்னர் உரைமீது நடந்த விவாதத்தில் விலைவாசிகள் உயரவில்லை, குறைந்துதான் வருகின்றன என்று காங்கிரஸ்காரர்கள் பேசியுள்ளனர். விலைவாசிகள் குறைவதற்கு ஆதாரங் காட்டிப் பேசவும் துணிந்தார் உணவமைச்சரும். பெரும் நிலப்பிரபுக்களிடம் கொள்முதல் செய்யும் கொள்கையை அறிவிக்கத் தயக்கம் காங்கிரஸ் கட்சித் தலைமையில் ஆழமாக இருக்கிறது.

எனவே, சர்க்கார் ஓரளவுக்கு இறங்கிவந்து இம்மாத இறுதிக்குள் தங்கள் கொள்கையை வெளியிட முன்வந்தது வரவேற்கத்தக்கதே. ஆனால் காங்கிரஸ் சர்க்கார் தானாகவே மக்களின் விருப்பத்தை அப்படியே நிறைவேற்றி விடுமென்று கருதுவதற்கு இடமில்லை. இதைக் குறித்து மக்கள் தொடர்ந்து கிளர்ச்சி செய்து உஷாராயிருக்க வேண்டும். சர்க்கார் அறிக்கை பிரச்சினைக்குப் பரிகாரம் காணும் முறையில் இல்லாவிட்டால் மக்கள் கை கட்டி வாய்பொத்தி இருக்க முடியாது. கொள்முதலை சர்க்கார் அறிவித்துவிட்டாலுங்கூட நாம் திருப்தியடைந்துவிட முடியாது. அதை நடைமுறையில் நிறைவேற்றுகிறார்களா என்பது மக்கள் எச்சரிக்கையாயிருந்து தமிழகமெங்கும் அதை வற்புறுத்துவதைப் பொறுத்துத்தானிருக்கிறது.

ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம். இரண்டுமாத காலத்திற்குள் சர்க்காரை இந்த அளவுக்குச் சிந்திக்க வைத்துள்ள மக்களின் அணிவகுப்பு சர்வகட்சிக் குழு முன் வைத்துள்ள ஆலோசனைகள் ஏற்கப்படும்வரை உறுதியாகப் போராடி வெற்றி காண்பது நிச்சயம்.

சர்வகட்சி அணிவகுப்பின் தொடர்ந்த கிளர்ச்சி இப்பிரச்சினையில் உருப்படியான மாற்றம் காண்பதற்கு இன்றியமையாததெனக் கருதுகிறோம்.

# திபேத்தில் மனித உரிமையும் மத உரிமையும் மக்களுக்கு கம்யூனிஸ்ட் ஆட்சியில்தான் கிடைத்துவருகின்றன

## காட்டுமிராண்டி சமுதாயம் நொறுக்கப்படுகிறது

### பீகிங்கில் பஞ்சன்லாமா பேச்சு

பீகிங், டிச. 16—

சீனாவின் தேசிய மக்கள் காங்கிரஸின் நிரந்தரக் குழுவின் உபதலைவரும், திபேத் சுயாட்சிப் பிரதேசத்தின் தயாரிப்புக் குழுவின் தலைவருமான பஞ்சன் எர்தேனி (பஞ்சன் லாமா) அவர்கள் இங்கு 10,000 பேர் திரண்டதோர் கூட்டத்தில் பேசுகையில், திபேத்தில் பிற்போக்காளர்களின் கலவரம் ஒடுக்கப்பட்ட பிறகு அங்கு ஏற்பட்டுள்ள சீர்திருத்தங்களை விளக்கினார். திபேத் பிரச்சினையில் அமெரிக்க ஏகாதிபத்தியமும் இதர அன்னிய நாட்டுப் பிற்போக்காளர்களும் தொடர்ந்து தலையிட்டு வருவதைக் கண்டித்தும் பேசினார்.

பஞ்சன் எர்தேனி பேசுகையில், "தங்களுடைய முன்னேற்றத்துக்கு உகந்தது என்று திபேத்திய மக்கள் எந்தப் பாதையை மேற்கொண்டாலும்சரி, அந்தப் பாதையினின்றும் திரைமறைச் செல்ல ஒருக்காலும் சம்மதிக்க மாட்டார்கள். ஏகாதிபத்தியவாதிகள் என்ன கத்து கத்தினாலும் முன்னேறிச் சுழலும் காலச்சக்கரத்தைத் தடுத்து நிறுத்த முடியாது. ஏகாதிபத்தியவாதிகள் நரிகளைப்போல் ஊளையிட்டாலும் சரி, ஆந்தையாய் அலறினாலும் சரி நாங்கள் முன் வைத்த காலைப் பின் வாங்கப் போவதில்லை. திபேத்தில் புரட்சியின் கடமைகள் பூரணமாக நிறைவேறும் வரை, சுரண்டலும் அடிமைத்தனமும் அடியோடு ஒழியும் வரை நாங்கள் முன்னேறிக்கொண்டு தான் இருப்போம்.

#### காட்டுமிராண்டி சமூக முட்டுத்தாங்கிகள்

"அமெரிக்க ஏகாதிபத்யவாதிகளும் அவர்களின் கையாட்களும் இன்று திபேத்தில் 'மனித உரிமைகள்' பறிக்கப்பட்டுவிட்டனவென்றும், 'பிரஜா உரிமைகள்' இல்லையென்றும், 'மத வழிபாடு' உரிமை இல்லையென்றும், திபேத்திய இன மக்களை சீனக் கம்யூனிஸ்டு கட்சி 'அடக்கி ஒடுக்கி அழித்து' வருவதாகவும் தொடர்ந்து பிரச்சாரம் செய்து வருகிறார்கள். இவர்கள் தமது கற்பனைத் திறமையால் எவ்வளவுதான் கயிறு திரித்து விஷயமறியாத ஏமாளிகளை ஏமாற்றினாலும்கூட, அறிவாளிகளையும் திபேத்திய மக்களையும் ஒரு நாளும் ஏமாற்ற முடியாது.

"இப்பொழுது திபேத்தில் நிலவரம் எப்படி இருக்கிறது என்ற உண்மையைப் பற்றியோ அல்லது திபேத்தில் இதற்கு முன் இருந்த அடிமைச்சமூக அமைப்பு எப்படி இருந்தது என்பதைப் பற்றியோ ஒரு வார்த்தையாவது உண்மையைக் கூற இவர்களுக்கு தைரியம் கிடையாது.

"இந்த கனதனவான்கள், பிற்போக்கானதும், பின்தங்கியதும், காட்டுமிராண்டித் தனமானதும், குரூர அடிமைத்தனமானதுமான பழைய திபேத்தின் முட்டுத்தாங்கிகளாக விளங்குகிறார்கள்.

#### தோல்வியால் ஆத்திரம்

"திபேத்தில் 10 மாதங்களுக்கு முன்னே மேல்தட்டுப் பணக்கார வர்க்கமானது, தங்களுக்கு அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளும் அன்னிய பிற்போக்காளர்களும் ஆதரவு தருவார்கள் என்ற துணிச்சலில், கலகத்தில் இறங்கினார்கள். அக்கலகத்தில் ஒன்றிரண்டு நகரங்களிலுள்ள அவர்களும் அவர்களது ஆதரவாளர்களும் தவிர, ஏழை மக்களோ, நடுத்தர வர்க்கத்தாரோ, கிராம மக்களோ யாரும் சேரவில்லை. சேராதது மட்டுமல்ல, கலவரத்தை ஒடுக்குவதற்கு நமது சீன சர்க்காரின் படைகளுடன் ஒத்துழைத்தார்கள். இன்றைய நிலைமை என்ன? அடிமை சமூக அமைப்பு உடைத்து நொறுக்கப்பட்டு, அதனது கடைசி அத்தியாயம் நடந்துகொண்டிருக்கிறது. இதனால்தான் அன்னியச் சீமான்களுக்கும் அவர்களது கையாட்களுக்கும் ஆத்திரம் ஆத்திரமாய் வருகிறது. அதைக்காட்டிலும் அதிக பீதி என்னவென்றால், அடிமைச் சமூகத்துக்கு கல்லறை கட்டும் பணியில், திபேத்திய மக்களெல்லாம் ஐக்கியமாக அணிதிரண்டு நிற்கும் காட்சிதான். இதுதான் இச்சீமான்கள் நெருப்பிற்பட்ட புழுப்போல் துடிக்கக் காரணமாக இருக்கிறது. அதனால் தான் ஐ. நா. சபையில் திபேத்தியப் பிரச்சினையை இழுத்து, தங்களுடைய அவலட்சணத்தைக் காட்டிக்கொண்டார்கள்.

#### அன்றைய திபேத்தில் என்ன உரிமை வாழ்ந்தது?

"காலமெல்லாம் நிலப்பிரபுத்வ பண்ணையடிமை சமூகத்தில் திபேத்திய மக்கள் அனுபவித்து வந்த கொடுமைகளை யாரும் மறந்துவிடவில்லை. வேலைக்கஷ்டம் தாளாமல் நகரங்களுக்குத் தப்பி ஓடிப்போகும் விவசாயிகளை தேடிப்பிடித்து வந்து காலை வெட்டிவிடுவதே தண்டனையாக அன்று இருந்தது. தான் பாடுபட்டு விளைவித்த சோளக் கதிரை பசி தாளமாட்டாமல் பிடுங்கித் தின்றுவிட்டால் அந்த விவசாயியை மரத்தில் கட்டிவைத்து சாட்டையால் அடித்து, கைகளையே வெட்டிவிடும் தண்டனையும் அன்று இருந்தது. குற்றம் சாட்டப்பட்ட ஏழை மக்கள் தாம் கூறுவது சத்தியம்தான் என்று நிரூபிக்க, கொதிக்கும் நெய் சட்டியில் கைவைக்க வேண்டுமென்ற குரூர முறையும் அன்று இருந்தது. கண்களைப் பிடுங்கும் தண்டனையும் காதுகளையும் மூக்கையும் அறுக்கும் தண்டனை முறைகளும் அன்று இருந்தன. ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கு எஜமான் புறப்பட்டால் அடிமையின் முதுகின்மேல் ஏறிக் கொண்டு செல்லுவதுதான் வழக்கமாக இருந்தது.

"ஓயாது உழைத்தும் வயிறாரச் சாப்பிட வழியில்லை. குளிரிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள கந்தைத் துணிகளும் மரப்பட்டைகளும்தான் கதி. இழி ஜாதி எனக் கருதப்படும் அடிமை மக்களின் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடமே இல்லை. அடிமைகள் எவருக்கும் கல்வி வாசனையே இல்லை. இவைதான் அன்றைய திபேத்திய மக்கள் அனுபவித்துவந்த சுதந்திர உரிமைகள்! இவையெல்லாம் நீடித்திருக்க வேண்டுமென்பதுதான் கலவரக்காரர்களின் விருப்பம். அவர்களை ஆதரிக்கும் ஏகாதிபத்யவாதிகளும் பிற்போக்காளர்களும் இப்படிப்பட்ட அடிமை சமூகஅமைப்புக்குத்தான் வக்காலத்துவாங்குகிறார்கள். அவர்கள்தான் கலகக்கார மேல் தட்டு பணக்கார வர்க்கத்துக்கு வழிகாட்டிகளுமாவர்.

#### திபேத்தை காலனியாக்க கலகத்தைத் தூண்டினர்

"கலகக்காரர்களின் முகமூடியெல்லாம் கிழித்தெறியப்பட்டுவிட்டன. கலகத்தின் நோக்கம் மதமும் அல்ல; தேசிய சுதந்திர உணர்வும் அல்ல. திபேத்தில் ஜனநாயகமும் சோஷலிஸமும் ஏற்பட்டுவிட்டால் பரம்பரைச் சுரண்டலும் காட்டுராஜா தர்பாரும் ஒழிந்துவிடுமே என்று மிரண்ட எஜமானவர்க்கத்தாரும், திபேத்துக்கு சுதந்திரம் என்ற பேரால், சீனத் தாய்நாட்டிடமிருந்து திபேத்தைத் தனியாகப் பிரித்து பலவீனப்படுத்தி தங்கள் காலனியாக்கிக்கொள்ள விரும்பிய ஏகாதிபத்தியவாதிகளும் அன்னியப் பிற்போக்காளர்களும் சேர்ந்து செய்த சதிதான் திபேத்திய கலவரம். அது தேசிய எழுச்சியுமல்ல, மதத்தைக் காக்கும் எழுச்சியுமல்ல.

#### திபேத் சுவர்க்கமாகும்

இன்றைய திபேத்தின் நிலைமை என்ன? கலகக்காரர்கள் ஏற்படுத்திச் சென்ற காயங்களையும் கஷ்டங்களையும் சமாளித்துக் கொண்டு திபேத் மக்கள் முன்னேறுகிறார்கள். மாமேதை மா சே-துங்கும், சீனக் கம்யூனிஸ்ட் கட்சியும், சீனாவிலுள்ள சகல இன மக்களும் அளித்து வரும் உதவியோடு திபேத் திருநாடு பொன்னாடாகி வருகிறது. ஜனநாயக சீர்திருத்தங்களும் சோஷலிஸமும் அமுலாக்கப்பட்டு சீக்கிரம் திபேத் சுவர்க்கபோகம் அனுபவிக்கும் காலம் சமீபித்துக் கொண்டிருக்கிறது.

அடிமைப்பட்டுக்கிடந்த உழைப்பாளி மக்களுக்கு நிலம் கிடைத்துவிட்டது. நவீனச் சாகுபடி நடக்கிறது. நிலமும் உழைப்பின் பலனும் தங்களுக்கே சொந்தமென்றமுறையில் எங்கும் பெருமையும் உற்சாகமும் பொங்குகிறது. பசி, பட்டினி பற்றாக்குறை, வேலையில்லாத் திண்டாட்டம், வீடில்லாத் திண்டாட்டம் யாவும் ஒழிந்தன. பள்ளிக்கூடங்களும், நவீன ஆஸ்பத்திரிகளும், குழந்தை வளர்ப்பு விடுதிகளும், சிறு கைத்தொழில்களும், சுரங்கம், பஞ்சாலை, மின்சார நிலையம் முதலிய தொழில்களும், சினிமா நாடகத் தியேட்டர்களும், முன்னைவிட கோலாகலமாக மதவழிபாடுகளும் அறுவடைத் திருவிழாக்களும் நடைபெறுகின்றன. கந்தையணிந்து லாசா நகர வீதிகளிலும் கோவில் வாசல்களிலும் கையேந்தி பிச்சையெடுத்தவர்களும் இன்று பட்டாடை உடுத்தி, சொந்த வயல்களுக்கு குதிரைமேல் சவாரி செல்லும் காட்சியைக்காணலாம். அடிமை சமுதாயத்தில் நசிந்து வந்த திபேத்திய மக்கள், இன்று சுபீட்சமுடன் விளங்குகிறார்கள். கோவில்களும், மடங்களும் தேசபக்த லாமாக்களும் பாதுகாக்கப்பட்டு, மரியாதை கொடுக்கப்படுகிறார்கள்.

#### சீன-இந்திய நட்புறவு நீடூழி வாழ வேண்டும்

சூ-யென்-லாயும் இந்தியப் பிரதமர் நேருவும் எல்லாத் தகராறுகளையும் தீர்க்கவேண்டும். சமாதானமாகவும் பஞ்சசீலத்தின் அடிப்படையிலும் பேச்சுவார்த்தைகள் நடத்தி, நியாயமான முறையில் தீர்வு காணவேண்டும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்திய-சீன மக்களின் மத்தியில்நீடித்து நிலவி வரும் நட்புறவைப் பாதுகாக்க வேண்டும். ஆசியர்களுக்கு எதிராக ஆசியர்களையே மோதவிட வேண்டுமென்று பகிரங்கமாக பிரகடனம் செய்த அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் ஆசைக் கனவுகள் பலிக்காது என்று நம்புகிறேன் என்று பேசி முடித்தார்.

கூட்டத்தில் பெபலா சோலியா நாம்ஜே, சூஜென்-ஷான், கபோ கவாங் ஜிக்மி ஆகியோரும் பேசினார்கள்.

# அலகாபாத் பல்கலைக் கழகம் மூடியதால் ஒத்திவைப்புத்தீர்மானம்

## மக்கள் சபையில் அனுமதிக்கப்படவில்லை

புதுடில்லி, டிச. 14—

அலகாபாத் பல்கலைக் கழகம் மூடப்பட்டது சம்பந்தமாக இன்று மக்கள் சபையில்கொண்டு வரப்பட்ட ஒத்திவைப்புத் தீர்மானத்தைச் சபாநாயகர் அனுமதிக்கவில்லை.

இது சம்பந்தமாகச் சபாநாயகர் அரசாங்கத் தரப்பில் விளக்கம் கோரியபொழுது கல்வித்துறை அமைச்சர் ஸ்ரீமாலி பின்வருமாறு பதிலளித்தார்:

லட்சுமணபுரி, அலஹாபாத் பல்கலைக் கழகங்கள் ராஜ்ய அரசாங்க அதிகார வரம்புக்குட்பட்டவை. யூனியன் அரசாங்கத்திடமிருந்தும் பல்கலைக் கழக மான்யக் கமிஷனிடமிருந்தும் அவை நிதி உதவி பெற்றாலும் மத்திய அரசாங்கத்துக்கு அவற்றின்மீது அதிகாரம் செலுத்த வழி இல்லை. இத்தகைய விவகாரங்களை இச்சபை விவாதிக்க முடியாது.

## அயூப் "ஜனநாயகத்திற்கு" ஜெயப்பிரகாஷ் புகழ்மாலை !

கராச்சி, டிச. 16—

பாகிஸ்தான் சர்வாதிகாரி "அடிப்படை ஜனநாயகம்" என்ற முறையில் நாட்டை நிர்வகிக்கப் போவதாக அறிவித்தாரல்லா? அந்த அயூப் "மாடல்" ஜனநாயகத்திற்கு சர்வோதயத் தலைவர் ஜெயப்பிரகாஷ் நாராயணன் போற்றிப் புகழ்மாலை சூட்டினார்.

இங்குள்ள கலாசார சுதந்திர காங்கிரஸ் கூட்டத்தில் பேசுகையிலேயே அவர் அயூப் "மாடல்" ஜனநாயகத்தை வரவேற்றுப் பேசினார். இன்னும் இந்தியாவில் பார்லிமெண்டரி ஜனநாயகம் கடைப்பிடிக்கப்பட்டு வந்தாலும், அதனால் மக்களுக்கு நன்மை ஏற்படவில்லையென்றும் கூறினார்.

அயூப்கான் ஆட்சியால் சிலநன்மைகள் ஏற்பட்டபோதிலும், அந்நன்மைகளெல்லாம்பயத்தால் ஏற்படுகிறதேதவிர,உள்ளன்பால்ஏற்படவில்லை. என்று அண்மையில் பூதான இயக்கத்தலைவர் ஆச்சாரி யாவினோபாபாவே அயூப்பின் சர்வாதிகார ஆட்சியைக்கண்டித்துப் பேசியது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம்.

## பர்மாவில் பொதுத்தேர்தல் பிப்ரவரியில் நடைபெறும்

ரங்கூன், டிச. 15—

டிச. 19ந் தேதி பார்லிமெண்டு கலைக்கப்படுமென்று பர்மா ஜனாதிபதி இன்று அறிவித்தார்.

பிப்ரவரி 6ந் தேதி பொதுத் தேர்தல் நடக்குமென்று தெரிகிறது.

### இலங்கை:

## தஹநாயக அமைச்சரவையில் தொடர்ந்திருக்க முடிவு

### ஸ்ரீலங்கா சுதந்திரக்கட்சி தீர்மானம்

கொழும்பு, டிச. 15—

மார்ச்சில் பொதுத் தேர்தல்கள் நடைபெறுவதுவரை தஹநாயக அமைச்சரவையில் தொடர்ந்திருக்கத்தனது கட்சி உறுப்பினர்களுக்கு அனுமதி வழங்க ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி (பண்டாரநாயகாவின் அரசியல் கட்சி) முடிவு செய்துள்ளது.

சென்றவாரம் இப்போதைய காபந்து சர்க்காரின் பிரதமராகிய தஹநாயகவை கட்சி உறுப்பினர் பதவியிலிருந்து ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி வெளியேற்றியது தெரிந்ததே.

காபந்து சர்க்கார் புதிய கொள்கை முடிவுகளைச் செய்யாது என்பதாலேயே தனது கட்சி உறுப்பினர்களை அமைச்சரவையில் நீடிக்க அனுமதித்திருப்பதாக ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சிப் பிரமுகரொருவர் விளக்கியுள்ளார்.

## சென்னைமாநில ஹோட்டல் தொழிலாளர்கள் மத்திய சங்கம், பொதுச்செயலாளர் வேண்டுகோள்

கோவை, டிச. 15—

திருப்பூர் நகரிலுள்ள ஸ்ரீராம கிருஷ்ண லஞ்சு ஹோம் ஓட்டல் நிர்வாகிகள் தங்களுடைய இந்த ஸ்தாபனத்தை பங்காளியின் வயது மூப்பின் காரணமாக 16-12-59 முதல் மூடிவிடப் போவதாகவும், அதன் காரணமாக 29 தொழிலாளர்களை ஆட்குறைப்பு செய்வதாகவும் 12-11-59ல் நோட்டீஸ் கொடுத்தார்கள். இதன்மீது லேபர் ஆபீசர் முன்னிலையில் பேச்சுவார்த்தை நடைபெற்றது. அச்சமயத்தில் தொழிலாளர் உரிமையை பாதிக்கும் சில நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டால் கடையை அடைக்கமாட்டேன் என்று கூறினார். அதனால் பேச்சுவார்த்தை முறிந்தது.

எனவே நியாயமற்ற இந்த கதவடைப்பை எதிர்த்து எல்லாத் தொழிற் சங்கங்களும் பொதுமக்களும் முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன் என்று சென்னை மாநில ஹோட்டல் தொழிலாளர் மத்திய சங்கச் செயலாளர் எழுதுகிறார்.

# சென்ற வாரம் பார்லிமெண்டிலே

[நமது விசேஷ நிருபர்]

சென்ற வாரம் டில்லியில் அமெரிக்க ஜனாதிபதியின் நடவடிக்கைகள்தான் பிரதானமாகவிருந்தது. பார்லிமெண்டிலும் பிரதிபலித்தது. சுரங்கப் பாதுகாப்பு மசோதா, வரதட்சிணை தடுப்பு மசோதா முதலியவை நிறைவேற்றப்பட்டன. திரிபுரா நிலச் சீர்திருத்த மசோதா விவாதிக்கப்பட்டது. பெங்களூரிலுள்ள ஹிந்துஸ்தான் மிஷின் டூல்ஸ் பாக்டரி பற்றி தங்கமணி துவக்கிவைத்த விவாதமும் நைனிடாலில் நடைபெற்ற 16-வது தொழிலாளர் மாநாட்டைப் பற்றிய விவாதமும் குறிப்பிடத்தகுந்தது. 14 கோடிக்குஉபமான்யம் நிறைவேற்றப்பட்டது. தென் பிராந்திய ரயில்வேயில் பாலம் உடைப்பு, பதான் கோர்ட்டில் வெடி வைப்பு, கரம்சிங்கை சீனர்கள் நடத்திய முறை. எண்ணெய் விலை குறைப்பு முதலியவைகளைப் பற்றிய மந்திரிகளின் அறிக்கைகளும் உள்ளன. குறைந்தபட்ச சம்பள சட்டத்துக்கு காங்கிரஸ் மெம்பர் வால்மீகி கொணர்ந்த திருத்த மசோதா (தனி மெம்பர் மசோதா) பேரில் நல்ல விவாதம் நடந்தது. பொதுவாக சுவாரஸ்யமான வாரம்.

### ஐக் வருகை

ஐஸன்ஹோவர் 9-ந் தேதி டில்லி வந்து சேர்ந்தார். 10ந் தேதி இருசபைகளின் கூட்டுக் கூட்டத்தில் பேசினார். ராஜ்ய சபை தலைவர் ராதாகிருஷ்ணனும் மக்கள் சபைத் தலைவர் அனந்தசயனம் அய்யங்காரும் சபைக்கு அமெரிக்க ஜனாதிபதியை அழைத்து வந்தனர். ராதாகிருஷ்ணன் தலைமை வகித்தார். ஐக் பேசிய பின் அனந்தசயனம் நன்றி தெரிவித்தார். பிரசங்க விபரம் ஏற்கனவே பத்திரிகைகளில் வந்துள்ளன. அன்று ஹாலின் இரு புறங்களிலும் கேமரா மயமாகவே யிருந்தது. அன்னிய நாட்டினரும் பலர் வந்தனர். ஐக்குடன் அவர் மகன், மருமகள், காரியதரிசி, நம் தூதுவர் சாக்ளா முதலியோரும் வந்தனர். (11ந் தேதி விவசாயக் கண்காட்சி திறப்பு, 12-ந் தேதி ஜனாதிபதி தேநீர் விருந்து, 13ந் தேதி ஆக்ரா, 14-ந் தேதி இந்தியாவை விட்டுப் புறப்படுதல்) 11-ந் தேதி கோரம் இல்லாததால் 5 மணிக்கு முடிய வேண்டிய இரு சபைகளும் 4 மணிக்கு முடிந்தது. அன்றுதான் விவசாயக் கண்காட்சி திறந்து வைக்கப்பட்டது.

### மசோதாக்கள்

(a) வரதட்சிணை தடுப்பு மசோதா: பொறுக்குக் கமிட்டியிலிருந்து வந்த மேற்படி மசோதா நிறைவேற்றப்பட்டது. தோழர்கள் பார்வதி கிருஷ்ணனும் ரேணு சக்ரவர்த்தியும் பேசினார்கள். வரதட்சிணை என்பதின் பொருளுக்கு விளக்கம் கொடுப்பதாக அனர்த்தமான திருத்தத்தை அரசாங்கம் கொண்டுவந்தது. அது ஓட்டுக்கு விடப்பட்டது. சாதகமாக 40 பேரும், எதிர்த்து 183 பேரும் ஓட்டளித்தனர். தங்களின் எதிர்ப்பைக் காண்பிக்க கம்யூனிஸ்ட் மெம்பர்கள் வெளிநடப்பு செய்தனர்.

(b) சுரங்கத் திருத்த மசோதா: இம் மசோதா நல்ல மசோதா தான். மந்திரி நந்தா பேசும் போது ஓவர்டையத்துக்கு அதிக சம்பளமும் போதுமான பாதுகாப்பும் நிலக்கரிச் சுரங்கத்தில் கொடுப்பதுதான் மசோதாவின் நோக்கம் என்பதை விளக்கினார். வித்தல்ராவ் பேசும்போது வேலை நேரம் குறைக்கப்படவேண்டும். லீவு வசதிகள் வேண்டுமென்றார். பிரபாத்கரும் பேசினார். லீவு வசதி சம்பந்தமான திருத்தம் ஓட்டுக்கு விடப்பட்டது. சாதகம் 28. எதிர்ப்பு 128. மசோதா நிறைவேற்றப்பட்டது. ராஜ்ய சபையில் நிறைவேறியபின் சட்டமாகும்.

(c) திரிபுரா நில மசோதா: இம் மசோதா பொறுக்குக்கமிட்டிக்கு அனுப்பப்படுகிறது. நிலமில்லாதோருக்கு நிலம் கொடுப்பது, இடைத் தரகரை ஒழிப்பது போன்ற அம்சங்கள் உண்டு. நிலவுடைமைக்கு வரம்பு என்ற பேச்சில்லை. கம்யூனிஸ்ட் தசரததேவ் பேசினார். இவர் திரிபுராவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர். பொறுக்குக் கமிட்டியிலும் அங்கம் வகிக்கிறார்.

### விசேஷ விவாதங்கள்

(a) இந்துஸ்தான் மெஷின் டூல்ஸ்: 4 கோடி ரூபாய் மூலதனத்தில் பெங்களூரில் மேற்படி தொழிற்சாலையுண்டு. லேத் முதலியவை உற்பத்தியாகின்றன. 2 00 தொழிலாளிகள் வேலை செய்கின்றனர். 400 மிஷின்கள் வருடத்திற்கு உற்பத்தியென திட்டம். சென்ற வருடம் 552 மிஷின்கள் உற்பத்தி. இங்கு தொழிலாளர் உற்பத்தி கவுன்சில் உண்டு. அரசியல் காரணத்தால் செயல்படாமலிருக்கிறது. பவுண்டரி தொழிற்சாலை ஆரம்பிப்பது அவசியம். தனியார்துறை போட்டி கூடாது. இவைகளை வற்புறுத்தி தங்கமணி 2½ மணி நேர விவாதத்தை துவக்கி வைத்தார். பிரபாத்கர் பேசினார். மந்திரி ஷா பதில் கொடுத்தார். தொழிலாளர் கவுன்சில் செயல்பட முயற்சிப்பதாகத் தெரிவித்தார்.

(b) 16வது இந்திய தொழிலாளர் மகாநாடு: 1958-ம் வருடம் மே மாதம் நைனிடாலில் நடைபெற்ற முக்கூட்டு மகாநாடு மிக முக்கியமானதாகும். தொழில் உறவு பற்றிய கோட்பாடு, போட்டி சங்கங்களுக்குள் கோட்பாடு, வைத்யஇன்சூரன்ஸ், தொழிற் தகராறு சட்ட திருத்தம் முதலிய முக்கியமான முடிவுகள் எடுக்கப்பட்டன. 2½ மணி நேர விவாதத்தை காங்கிரஸ் மெம்பர் டி. இ. சர்மா துவக்கி வைத்தார். கம்யூனிஸ்டுகள் தங்கமணி, வித்தல்ராவ் பேசினார்கள். அந்தோணிபிள்ளையும் பேசினார். தங்கமணி பேசுகையில், கோட்பாடுகள் பொதுத் துறைக்கு ஏன் விஸ்தரிக்கப் படவில்லை, பிராவிடண்ட் நிதிக்கு அளிக்கும் தொகையை 8⅓ சதமாக ஏன் உயர்த்தவில்லை எனக்கேட்டார். உதவி மந்திரி அபிதலி விவாதத்துக்கு பதிலளித்தார். சீக்கிரம் பிராவிடண்ட் பண்ட் சம்பந்தமாக மசோதா கொண்டுவருவதாக தெரிவித்தார். பொதுவாக விவாதம் நல்ல முறையில் அமைந்தது.

### அறிவிப்புகள்

நவம்பர் மாதம் இறுதியில் விருத்தாசலம் பக்கமும் திண்டுக்கல் பக்கமும் உடைப்பு ஏற்பட்டு வண்டிகள் மெயின் லயன் வழியாகச் சென்றன. 10-ந் தேதி முதல் சரியாகிவிட்டது என ரயில்வே உதவி மந்திரி ராமசாமி தெரிவித்தார். பல தமிழக மெம்பர்கள் உயர்ந்த கட்டணம் வசூலிப்பதைக் கண்டித்தனர். இது பின்னால் கவனிக்கப்படலாம்.

பதான் கோட் அருகில் தண்டவாளத்தில் வெடிவெடித்தது. 29-11-59-ல் அதைப் பற்றிய விபரத்தை ரயில்வே உதவி மந்திரி ஷா நவாஸ்கான் தெரிவித்தார்.

எண்ணெய் விலை குறைப்பால் முன்புவருடத்துக்கு ரூ 10 கோடி நமக்கு லாபம். இப்போது மேற்கொண்டு ரூ.5 கோடி லாபம். எனினும் நிரந்தரமான கோட்பாட்டுக்கு வரமுடியவில்லை. எனினும் முயற்சிப்போம் என மந்திரி மாளவியா தெரிவித்தார். இது டி. சி. என். மேனன், தங்கமணி முதலியோர் கேள்விக்குப் பதில்.

சுப்ரீம் கோர்ட் காஷ்மீர் அப்பீல்களை 26-1-60 முதல் கவனிக்கும். பாகிஸ்தான் ஆட்சேபித்தது வாஸ்தவம்தான். சாதன் குப்தா, தங்கமணி ஆகியோருக்கு பந்த் அளித்த பதில்.

லடாக் பகுதியில் சீனர்களால் கைது செய்யப்பட்டு பின்னர் விடுதலையான கரன் சிங் சரியான முறையில் நடத்தப்படவில்லை என பல மெம்பர்கள் புகார் செய்தார்கள். முழு விபரம் கிடைத்துள்ளதாகவும் 15ந் தேதி சபைக்கு அறிக்கை சமர்ப்பிப்பதாகவும் பிரதம மந்திரி நேரு தெரிவித்தார்

### இதர விஷயங்கள்

(a) உபமான்யம்: 14 கோடி ரூபாய் 1959-60க்கு உபமான்யமாகக் கோரப்பட்டது. விவாதத்தில் மேனன், சர்ஜூ பாண்டே, பாணிக்கிரகி ஆகிய கம்யூனிஸ்டு உறுப்பினர்கள் பங்கெடுத்தனர். எண்ணெய் விலை குறைக்கவேண்டிய அவசியம், சர்க்கரை வினியோக ஊழல், உரம் சரியானபடி காலகாலத்தில் சப்ளை செய்ய வேண்டிய அவசியம் முதலியவைகளைப்பற்றி பேசினார்கள்.

(b) தனி மெம்பர் மசோதா: காங்கிரஸ் மெம்பர் வால்மீகியின் மசோதாவின் பேரில் நல்ல விவாதம் நடந்தது. குறைந்தபட்ச சம்பள சட்டத்தின் 14வது விதியை திருத்தவும் ஓவர்டையத்துக்கு 2 மடங்கு சம்பளம் கொடுக்கவும் தங்கமணி, வித்தல் ராவ், சாதன் குப்தா, சர்ஜூ பாண்டே (கம்யூனிஸ்டுகள்) பேசினார்கள். பாக்டரி சட்டம், தோட்டத் தொழிலாளர் சட்டம் போன்றவை முனிசிபல் தொழிலாளர்கட்கு கிடையாது. அவர்களுக்கு இம் மசோதா அவசியம். விஷயம் ஓட்டுக்கு விடப்பட்டு முடிவில்லாமல் சபை கலைந்தது. பொதுவாக சுவாரஸ்யமான வாரம்.

# கோலார் மாவட்டச் செய்திகள்

டையரி ஒர்க்கர்ஸ் யூனியன் கூட்டம், உதவித் தலைவர் எம். பெருமாள் தலைமையில், இராபர்ட்சன் பேட்டை ஜனநாயக வாலிபர் சங்கத்தில் நடைபெற்றது. டையரி தொழிலாளர்களின் கூலி உயர்வு, உடை, போனஸ் கோரிக்கைகள் பற்றியும் டையரி தொழிலாளர்களுக்கும், குமாஸ்தாக்கள் போன்றோருக்கும் இலவசமாகப் பால் கொடுக்கப்படுவது போன்று, ஒவ்வொரு தொழிலாளிக்கும் ½ பவுண்டு பால் கொடுக்க வேண்டுமெனவும் கோரப்பட்டது.

### தோழர் இ. எம். எஸ்.

தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் தங்கவயலுக்கு இம் மாதம் 20ந் தேதி வருகிறார். அவருக்கு வரவேற்பளிக்க ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. கேரளத் தேர்தல் நிதியாக சுமார் ரூ. 2000 நன்கொடையாக அளிக்கப்படும். கட்சி அங்கத்தினர்களும், அனுதாபிகளும் உற்சாகத்துடன் நன்கொடையளித்துள்ளனர்.

கோலார் டவுனிலும் அவருக்கு வரவேற்பு அளிக்கப்படும். 20ந் தேதி மாலை பெங்களூரில் மாபெரும் பொதுக்கூட்டம் ஏற்பாடு செய்யப்படுகிறது. பல ஜில்லாக்களிலிருந்தும் கேரளத் தேர்தல் நிதி அளிக்கப்படும் எனத் தெரிகிறது.

### மகாசபைக் கூட்டம்

தங்கவயல் கட்சி மகாசபைக் கூட்டம் ஆண்டர்சன்பேட்டையில் நடைபெற்றது. வரப்போகும் கேரளத்தேர்தல்நிலைமைகளையும், கேரள கம்யூனிஸ்ட் கட்சியின் முயற்சிகளையும் தோழர் எஸ். சவரிதாஸ் விளக்கிக் கூறினார். தோழர் கே. எஸ். வாசன் கேரளத்தில் கம்யூனிஸ்ட் மந்திரி சபை தொழிலாளிகளுக்கு ஏற்படுத்தியுள்ள, சம்பளம் போனஸ், பிரசவகால சகாயம் போன்றவைகளை விளக்கினார்.

# பல்லடம் மில் தொழிலாளர் கூட்டம்

பல்லடம், டிச. 10—

கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கத்தின் பல்லடம் கிளைக் கூட்டம் தலைவர் திரு. கே. கருப்ப கவுண்டர் தலைமையில் நடந்தது. பி. கே. பொன்னன், பி. ஆனந்தசாமி, முருகேசன், பி. கே. வீராங்குடி முதலியோர் பேசினர். பீடி கம்பெனிகளை மூடிவிடுவதாக பீடி முதலாளிகள் நோட்டீஸ் கொடுத்திருப்பதைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேறியது.

# லட்சுமணபுரி பல்கலைக் கழகம் மூடப்பட்டது ஏன்?

## காங்கிரஸ் கோஷ்டிச் சண்டையின் ஒரு பகுதியா?

லட்சுமணபுரி, டிச. 14—
சமீபத்தில் லட்சுமணபுரி மாணவர்கள் நடத்தியப்போராட்டமும், அதைத் தொடர்ந்து பல்கலைக் கழகம் மூடப்பட்டதும் முதலெடுப்பவர்களால் ஊக்குவிக்கப்பட்டதாகும்.

### மாஜி பொருளாளர் குப்தா காரணகர்த்தரா?

காங்கிரஸ் அதிருப்தி கோஷ்டித் தலைவர் சி. பி. குப்தா, ஒரு சமயத்தில் பல்கலைக் கழக விவகாரங்களில் முக்கிய பொறுப்பாகிய பொருளாளர் ஸ்தானத்தை வகித்திருந்தவர். அவருடைய பெயர் இச்சம்பவத்திற்கு காரணமாக கூறப்படுகிறது. பல்கலைக்கழக நிருவாகத்திற்கு நடைபெற்ற கடந்த தேர்தலில் குப்தாவின் ஆதரவாளர்கள் படுதோல்வி அடைந்துவிடவே அவர் தனது பொருளாளர் பதவியை ராஜினுமா செய்து விட்டார்.

மாணவர் போராட்டம் குப்தாவின் ஆதரவாளர்களால் முடுக்கி விடப்பட்டதென பல்கலைக்கழக ஆசிரியர்கள் கூறுகிருர்கள். பல்கலைக்கழக நீதிமன்றம் நியமித்த கமிட்டி குப்தா பொருளாளராகப் பணியாற்றிய காலத்தில் பல்கலைக் கழக கணக்குகளை ஆய்வு செய்யப் போகிறதென்று முன்கூட்டியே தெரிந்துதான் மாணவர்களை போராட்டத்திற்கு தூண்டிவிட்டிருக்கிருர்கள்.

### ஆசிரியர்கள் மீதும் குறையிருக்கிறது

டாக்டர் சதன் போஸ், கட்சி சார்பற்றவர் எனினும் குப்தா எதிர்ப்பு நீதிமன்றத்தின் உறுப்பினர்; அவர் கூறும் போது, அரசாங்கம் ஆசிரியர்கள் சார்பில் பேச முன்வந்தவர்களும் சி. பி. குப்தா மாதிரியே கட்சி சார்புடையவர்களே. மாணவர் தலைவர்களுக்கெதிராக கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டுமென்ற ஆசிரியர்களின் யோசனையை அவர் கண்டித்தார். "ஆசிரியர்களே தவறுதலாக நடக்கும் போது மாணவர்கள் நல்ல முறையில் நடக்க வேண்டுமென்று நீங்கள் எதிர்பார்க்க முடியாது" என்ருர்.

பல்கலைக் கழக நீதிமன்றத்தில் உறுப்பினராகிய ராபின், மித்ரா (கம்யூனிஸ்ட்) உத்திரப் பிரதேச காங்கிரஸிற்குள்ளிருக்கும் கோஷ்டித் தலைவர்களின் சொந்த நலனுக்காக பல்கலைக் கழகத்தின் சுயாட்சி தன்மையை பலியிடுவதா என்று கூறியிருக்கிருர்.

### போலீசை தயாராக வைத்துக்கொண்டனர்

ராஜ்ய அரசாங்கம், ராணுவ போலீசை நடவடிக்கை எடுக்க தயாராக்கிக்கொண்டு பல்கலைக் கழகத்தை மூடிவிடும்படி, துணை வேந்தருக்கு ஆலோசனை கூறியுள்ளது. போலீசை கல்லூரியினுள்ளே துணைவேந்தர் அனுமதிக்கவில்லை. பல்கலைக் கழகத்தை மூடுவதற்கு இணங்கிவிட்டார்.

### பல்கலைக்கழக சுயாட்சிக்கு வேட்டு

லட்சுமணபுரி பல்கலைக் கழக அமைப்பு விதிகளை ரத்து செய்துவிட உத்திரப் பிரதேச அரசாங்கம் முடிவு செய்துள்ளது. கல்வி இலாகா உயர்தர அதிகாரியொருவரை நிருவாகியாக (அட்மினிஸ்ட்ரேட்டர்) நியமித்துள்ளது. இவருடன் ஆலோசகர் குழு ஒன்றும் நியமிக்கப் பட்டுள்ளது. மாணவர் போராட்டம் தொடருமாளுல் மேற்கூறிய குழுவும் நிருவாகியும் நடவடிக்கை எடுப்பர். ராஜ்ய அரசாங்கம் எடுத்துள்ள நடவடிக்கை, முன்பு காசி பல்கலைக் கழகம் சம்பந்தமாக மத்திய அரசாங்கம் எடுத்துக் கொண்ட நடவடிக்கைமாதிரியே தானிருக்கிறது. எவ்வித வேற்றுமையும் இல்லை.

ஆசிரியர்கள் சிலரின் லஞ்ச ஊழல், நேர்மையற்ற நடவடிக்கைகளுக்கு எதிராக மாணவர் போராட்டம் ஆரம்பிக்கப் பட்டது. அடுத்த துணைவேந்தராக வரவிருந்த ஒரு ஆசிரியரை எதிர்த்து இரு தினங்கள் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. —ஐ.பி.ஏ.

## 2-வது சம்பளக் கமிஷன் சிபாரிசுகள்

### பெரம்பூர் ரயில்வே தொழிலாளர் அதிருப்தி

சென்னை, டிச. 14—
சம்பளக் கமிஷன் சிபாரிசுகள் சம்பந்தமாக தட்சிண ரயில்வே ஊழியர் சங்கத்தின் பெரம்பூர் கிளைக் கூட்டத்தின் தீர்மானம் வருமாறு:

"2வது சம்பளக் கமிஷனின் சிபாரிசுகள் முக்கியமாக ரயில்வே சிப்பந்திகளின் சட்டரீதியான அபிலாஷைகளைச் சிறிதும் நிறைவேற்றுவதாக அமைந்திருக்கவில்லை ஏ.ஐ.ஆர்.எப். பிரதிநிதிகள் சர்க்காருடன் கலந்துபேசி, திருப்திகரமான பரிகாரம் காண வேண்டும். அது சாத்யமல்லாவிட்டால், நேரடி நடவடிக்கை தவிர வேறு வழியில்லை. இக்கிளை நேரடி நடவடிக்கை எடுப்பதில் ஒத்துழைக்கும். மத்திய சர்க்கார் ஊழியர், தபால்-தந்தி ஊழியர் சங்கங்கள், எடுத்துள்ள நிலையை இக்கூட்டம் வரவேற்கிறது. 2வது சம்பளக் கமிஷன் சிபாரிசுகளை அவ்விரு சங்கங்களும் வன்மையாக ஆட்சேபித்திருப்பதை இக்கூட்டம் பாராட்டுகிறது."

கூட்டத்தில் எம். மல்லிகார்ஜுனன் தலைமை வகித்தார்.

## மாவட்ட அபிவிருத்திக் கவுன்சில் தேர்தல்

### தோழர் வி. எம். ஜெயராமன் வெற்றி

வீரப்பாண்டி, டிச. 14—
12-12-59ல் நடைபெற்ற தெ. ஆற்காடு மாவட்ட அபிவிருத்திக் கவுன்சில் உறுப்பினர் தேர்தலில் வீரப்பாண்டி பஞ்சாயத்துத் தலைவரும் "பஞ்சாயத்து ராஜ்யம்" பத்திரிகையின் ஆசிரியருமான தோழர் வி. எம். ஜெயராமன், கடுமையான போட்டிக்கு இடையில் அதிக ஓட்டுகள் பெற்று வெற்றியடைந்தார்.

எதிர்த்துநின்ற ஆற்காடு பஞ்சாயத்து தலைவருக்கு (காங்கிரஸ்காரர்) 9 ஓட்டுகளும், வெற்றி பெற்ற வி. எம். ஜெயராமனுக்கு 18 ஓட்டுகளும் கிடைத்தன.

திருக்கோவிலூர் தாசில்தார் திரு. என். துரைக்கண்ணன் தேர்தலை நடத்திவைத்தார். வெற்றி பெற்றவர் சார்பில், திருக்கோவிலூர் பஞ்சாயத்து அலுவலகத்தில் பஞ்சாயத்துத் தலைவர்களுக்கு தேனீர் விருந்தளிக்கப் பட்டது.

அஸ்ஸாம் தேர்தலில்

# கம்யூனிஸ்ட் வெல்ல, காங்கிரஸ் தோற்றது ஏன்?

## பிர்லா பத்திரிகையின் கலக்கம்

புதுடில்லி, டிச. 15—
பிர்லா முதலிய பெரு முதலாளிகளின் பத்திரிகையான "ஈஸ்டர்ன் எகானமிஸ்ட்" 11-12-59-ந் தேதி இதழில் அஸாம் உபதேர்தல் முடிவு பற்றி கவலையோடு பின்வருமாறு எழுதியிருக்கிறது:

"அஸாம் சீனாவின் எல்லைப் புறத்திலே இருக்கிறது. எல்லை சம்பந்தமான தகராறு இந்தியாவில் சூடான பிரச்சினையாக இருக்கிறது. இச்சமயத்தில் நடந்த சட்டசபை உப தேர்தல் மிகவும் அரசியல் முக்கியத்துவம் வாய்ந்தது. இதில் காங்கிரஸ் சார்பில் நின்ற சட்டசபை சபாநாயகர் தேவகாந்த பரூச்சா தோற்ருர். கம்யூனிஸ்ட் தலைவர் பானி போரா வெற்றிபெற்ருர்.

"இது பலருக்கு அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறது. பலருக்கு குழப்பத்தை உண்டுபண்ணியிருக்கிறது. இதற்குக் காங்கிரஸ் தலைமையினர் பலவித சாக்குப் போக்குகள் கூறி, இதன் முக்கியத்துவத்தை மறைக்க முயல்கிருர்கள்.

### வென்றவர் தோற்ருர்

"பரூச்சா தோல்வி சாமானியமானதல்ல. இதன் காரணங்களை எல்லோரும் கவலையுடன் அறிந்துகொள்ள வேண்டும். 1957 பொதுத் தேர்தலில் இதே கம்யூனிஸ்ட் அபேட்சகரை இதே பரூச்சா 1000 ஓட்டு வித்தியாசத்தில் தோற்கடித்தார்.

"இந்த உப-தேர்தலில் திபெத் விவகாரத்திலும், இந்திய-சீன எல்லைத் தகராறிலும் கம்யூனிஸ்டு கட்சியானது தேச விரோதமாகவும், காட்டிக் கொடுக்கும் முறையிலும் நடந்துகொண்டிருப்பதாக காங்கிரஸ் கட்சியினரால் மிகவும் திறமையாகவும் சாதுர்யமாகவும் பிரச்சாரம் செய்யப்பட்டதா? பிரச்சாரம் செய்திருந்தால் கம்யூனிஸ்ட் கட்சியை மக்களிடமிருந்து தனிமைப்படுத்த முடியாமற்போன காரணம் என்ன என்று கேட்கிருேம்.

### கலக்கமே ஏற்படுகிறது

"இதுபற்றி காங்கிரஸ் முயற்சித்தும்கூட, காங்கிரஸ் கட்சியின் பேச்சை வாக்காளர்கள் புறக்கணித்துவிட்டு, காங்கிரஸ் கட்சியைத் தோல்வியுறச் செய்திருந்தால், அது தேசிய சக்திகளுக்கு கலக்கத்தை உண்டுபண்ணுவதாகவே இருக்கும். அஸாம் எல்லை ராஜ்யமாயிற்றே! நேபா பிரதேசத்திற்கு அப்பாலிருந்து தாக்குதல் வருமேயாளுலும்சரி, உள்ளிருந்தே தாக்குதல் வருமேயாளுலும் சரி, அஸாம் திறந்த வெளியாக இருக்கிறதே! நவ்காங் உபதேர்தல் முடிவானது காங்கிரஸ் மேலிடத்தின் கண்களைத் திறக்கவேண்டும். இந்திய கம்யூனிஸ்ட் கட்சிக்கு இன்னும்கூட தொல்லை கொடுக்கும் சக்தி எவ்வளவு இருக்கிறதென்பதையே இந்த உபதேர்தல் காட்டியுள்ளது" என்று ஒப்பாரி வைக்கிறது.

## சீன அரசிற்கு அனுப்பிய குறிப்பு

### சபையில் நேரு சமர்ப்பித்தார்

புதுடெல்லி, டிச. 16—
சீன இராணுவத்தினரால் பிடிக்கப்பட்ட காம்சிங்கும், மற்றவர்களும் சிறையில் நல்ல முறையில் நடத்தப்படவில்லையென்று இந்திய அரசாங்கம் சீன அரசாங்கத்திற்கு ஒரு குறிப்பு அனுப்பியிருந்ததல்லவா? அக்குறிப்பின் நகலையும், காம்சிங்கின் அறிக்கையையும் நேற்று மக்கள் சபையில் நேரு சமர்ப்பித்தார்.

காம்சிங்கும், பிறரும் நன்கு தான் நடத்தப்பட்டார்களென்று சீன அரசு அளித்த பதிலை இந்திய அரசின்குறிப்பு மறுத்திருக்கிறது.

காம்சிங்கின் அறிக்கையில் தமது குழுவினருக்கு போதுமான உணவும், தங்குமிடமும் அளிக்கப்படவில்லையென்றும், பலமணி நேரம் சீன ராணுவ அதிகாரிகள் தம்மை கேள்விகள் கேட்டதாகவும் கூறியிருக்கிருர்.

## இம்பீரியல் புகையிலைக் கம்பெனி முதலாளியின் ரிட்மனு தள்ளுபடி

சென்னை, டிச. 14—
திருவொற்றியூர் இம்பீரியல் புகையிலைக் கம்பெனி நிருவாகத்தினர் சென்ற 1-8-'59-ல் "கோஸ்லோ" (மெதுவாக வேலை செய்வது) என்ற குற்றஞ்சாட்டி தொழிலாளர்களில் 6 பேரை டிஸ்மிஸ் செய்தனர். இந்நடவடிக்கைக்கு அனுமதி கேட்டு லேபர் கோர்ட்டுக்குச் சென்றனர். அனுமதி மறுக்கப்பட்டது. எனவே 6 தொழிலாளர்களும் பழைய சர்வீசுடன் 23-3-'59 முதல் வேலையில் சேர்ந்தனர். மீண்டும் அதே குற்றஞ்சாட்டி 31-5-'59-ல் அதே தொழிலாளிகளை டிஸ்மிஸ்செய்து நிர்வாகம் தனது நடவடிக்கைக்கு லேபர் ஆபீசரிடம் அனுமதி கோரியது. ஆபீசர் அனுமதி தரவில்லை பழிவாங்கும் நோக்கத்துடன் 6 பேர்களையும் நிருவாகம் டிஸ்மிஸ் செய்துள்ளது என்று லேபர் ஆபீசர் தீர்ப்பில் தெளிவாகக் குறிப்பிட்டிருந்தார். இத்தீர்ப்பை எதிர்த்து சென்னை உயர் நீதி மன்றத்தில் 'ரிட்' மனு தாக்கல் செய்தனர். நீதிபதி ரிட் மனுவை தள்ளுபடி செய்தார். முதலாளிகள் சார்பில் திரு. திரு வேங்கிடாச்சாரியும், தொழிலாளர் சார்பில் திரு. பி. கல்யாண சுந்தரமும் வாதாடினர். (ந.கி.)

# மத்திய பிரதேச சர்க்கார் ஊழியர் வேலை நிறுத்தம்

## இதுவரை 400 பேருக்கு மேல் கைது

### பெண்கள், குழந்தைகள் ஆர்ப்பாட்டம்

போபால், டிச. 15—
மத்திய சர்க்கார் ஊழியர்கள் வேலை நிறுத்தம் சம்பந்தமாக 400-க்குக் கூடுதலான சர்க்கார் ஊழியர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர். 400 பேரில் 179 பேர் போபால் நகரைச்சேர்ந்தவர்கள். போபாலில் சர்க்கார் அச்சுக் கூடத் தொழிலாளர்களும் இன்று இந்த வேலைநிறுத்தத்தில்சேர்ந்து கொண்டனர்.

மத்தியப் பிரதேச ராஜ்யத்தின் 43 ஜில்லாக்களில் 38 ஜில்லாக்களில் வேலை நிறுத்தம் பரவியிட்டதாக வேலை நிறுத்தக் கமிட்டி பிரதிநிதி அறிவித்துள்ளார்.

### 43 ஊழியர் வேலை நீக்கம்

இந்த வேலை நிறுத்தம் சம்பந்தமாக 43 ஊழியர்களை மத்திய பிரதேச சர்க்கார் இன்று வேலையிலிருந்து நீக்கியது.

வேலை நிறுத்தத்தில் சேர்ந்துள்ள தாற்காலிக ஊழியர்கள் அனைவரையும் வேலையிலிருந்து நீக்கிவிட சர்க்கார் முடிவு செய்துள்ளது.

வேலைநிறுத்தத்தில் சேர்ந்தவர்களை தாற்காலிகமாக வேலையிலிருந்து நீக்கிவிடவும் நீதிமன்றத்தில் தண்டனை அடைந்தவர்களை வேலையிலிருந்தே நிரந்தரமாக நீக்கிவிடவும் சர்க்கார் முடிவு செய்துள்ளது.

### பெண்கள், குழந்தைகள் ஆர்ப்பாட்டம்

இன்று போபாலில் 80 சர்க்கார் ஊழியர்கள் கைது செய்யப்பட்டு கோர்ட்டுக்குக் கொண்டு போகப் பட்டபோது, பல பெண்கள் கைக் குழந்தைகளுடன் போலீஸ் லாரிக்குள் தங்கள் கணவன்மார்களுடன் ஏறிக்கொண்டனர். வழி நெடுக கோஷமிட்டுக் கொண்டு சென்றனர். போலீஸ் ஸ்டேஷனில் அவர்கள் உட்கார அனுமதிக்கப்பட்டனர்.

இன்றும் 80 பேர் கைதியானதாகச் செய்தி பரவவும், சர்க்கார் ஊழியர்களின் குழந்தைகள் ஊர்வலமாக போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று தங்கள் பெற்ருேர்களை விடுதலை செய்யும்படிக் கோஷமிட்டனர். போலீஸ் ஸ்டேஷன் எதிரில் கோஷமிட்ட பிறகு குழந்தைகள் வீடுதிரும்பினர். (பிடிஐ)

## சீன-இந்திய எல்லைப் பிரச்சினையும் பிற்போக்காளர் பிரசாரமும்

### மதுரைக்கூட்டத்தில் எஸ். ஏ. தங்கராஜ் பேச்சு

மதுரை, டிச. 15—
மதுரை நகர் கம்யூனிஸ்ட் கட்சியின் 24-வது வார்டு கிளையின் சார்பில் டிசம்பர் 10ல் ஒரு பொதுக்கூட்டம், நகரசபை உறுப்பினர் தோழர் வி. வீரபத்திரன் தலைமையில் நடைபெற்றது.

ஆரம்பத்தில் மதுரை மோட்டார் லேபரர்ஸ் யூனியன்பொதுக் காரியதரிசி தோழர் பி. தண்டபாணி இந்திய-சீன எல்லைப் பிரச்சினையும், கம்யூனிஸ்ட் கட்சிக் கொள்கையும் என்பதுபற்றிப் பேசினுர்.

அடுத்து தோழர் எஸ். ஏ. தங்கராஜ் பேசுகையில், இன்று இந்திய-சீன எல்லைப் பிரச்சினை சம்பந்தமாக, நாட்டிலுள்ள பிற்போக்குக் கும்பல்களும், முதலாளித்துவப் பத்திரிகைகளும் கம்யூனிஸ்ட் கட்சியைத் தாக்குவதையே பிரதானகுறிக்கோளாகக் கொண்டுள்ளனர், என்ருர். இதன் தொடர்ச்சியாகவே இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையையும், பிரதமர் நேருவையும்கூட தாக்கி வருகின்றனர். இந்நிலையில் இந்தியாவின் சுதந்திரமான, நடுநிலைமைக் கொள்கையைக் காப்பாற்றும் பொறுப்பு கம்யூனிஸ்ட் கட்சியின்மீது சார்ந்துள்ளது, என்றும் தோழர் தங்கராஜ் கூறினுர். பிறகு, கேரளத் தேர்தல் நிலவரம் பற்றியும் விரிவாகப் பேசினுர்.

## ஸ்வீடன் பிரதமர் இந்தியா வருகிருர்

புதுடில்லி, டிச. 15—
பிரதமர் நேருவின் அழைப்பின் பேரில் ஸ்வீடன் பிரதமர் எர்லாண்டர் டிசம்பர் 18-ந்தேதி புது டில்லிக்கு வருகிருர். அவர் 12 நாட்கள் இந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்வார்.

# மேலும் பல தொழில்களில் மெட்ரிக் முறை உபயோகம் அமுல்

## அடுத்த நிதி வருஷத்திலிருந்து புதிய முறைக்கு மாறும்

புதுடில்லி, டிச. 13—
அடுத்த நிதி ஆண்டு ஆரம்பத்திலிருந்து அதாவது 1960 ஏப்ரல் 1-ந் தேதியிலிருந்து, மெட்ரிக் முறை உபயோகம் மேலும் நான்கு தொழில்களில் அமுலுக்கு வரும். அவை வனஸ்பதி, சாயம், பிஸ்கெட் தயாரிப்பு, சோப்பு ஆகிய தொழில்களாகும்.

புதிய முறை பழைய முறையுடன் சேர்ந்தாற்போல் உபயோகத்திலிருந்து வருகிற இடைக் காலத்தில் இந்த அளவுவனஸ்பதி, சோப் தயாரிப்புத் தொழில்கள் விஷயத்தில் ஆறு மாதமாகவும் சாயத் தயாரிப்புத் தொழில் விஷயத்தில் ஒரு வருஷமாகவும், பிஸ்கெட் தயாரிப்புத் தொழில் விஷயத்தில் இரண்டு வருஷமாகவும் இருக்கும்.

மெட்ரிக் முறை உபயோகம் இந்த தொழில்களுக்கு விஸ்தரிக்கப்பட்டு அமுலுக்கு வந்த பின்னர், நாட்டின் வர்த்தக தொழில் துறைகளில் பெரும்பகுதி அதன் உபயோகத்தின்கீழ் வந்துவிடும். சணல், பருத்தி, பருத்தி ஜவுளிகள், இரும்பு உருக்கு, அயக் கலப்பற்ற உலோகங்கள், எஞ்சினீயரிங், கனரக ரசாயனப் பொருள்கள், சிமெண்ட், உப்பு, காகிதம், கயிறு ஆகிய தொழில்கள் உட்பட பதினெட்டு தொழில்கள் மெட்ரிக் முறை உபயோகத்தை ஏற்கனவே மேற்கொண்டிருக்கின்றன.

மெட்ரிக் முறை, சுங்க வரிகள் விதிப்பு, வசூல் விஷயத்தில் 1960 ஆகஸ்ட் மாதம் முதல் உபயோகத்துக்கு மேற்கொள்ளப்படும்.

# சாதாரண உப்பை சிந்திரி உரம் என்று விற்றவர்கள் பிடிபட்டனர்

## அவர்கள்மீது நடவடிக்கை எடுக்கத் தயக்கமேன்?

### அரியலூர் கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி கேள்வி

அரியலூர், டிச. 15—
அரியலூரில் சாதாரண உப்பை சிலர் சிந்திரி உரம் என்று ஏமாற்றி விற்கிருர்கள் எனத் தகவல் கிடைத்ததின் பேரில் அரியலூர் கம்யூனிஸ்ட் கட்சிக் காரியதரிசி தோழர் ஏ. ஆர். சீனிவாசனும், கே. பாலசுப்ரமணியனும் 26 11 59 அன்று அரியலூர் டிப்டி தாசில்தாரிடம் சென்று தகவல் கொடுத்தனர்.

அதன்பேரில் டிப்டிதாசில்தார், மெய்யப்ப செட்டியார் கமிஷன் மண்டியில் போய் விசாரித்ததில் திரு மெய்யப்ப செட்டியார், இதுபற்றி தனக்கு ஒன்றும் தெரியாதென்றும், உர மூட்டைகள் என்று கூறப்படும் உப்பு மூட்டைகள் இருக்குமிடம் தன்னுடையதல்லவென்றும் கூறி எழுத்து மூலம் வாக்குமூலமும் கொடுத்தார்.

அதன்பிறகு டிப்டி தாசில்தார், ஏ. ஆர். சீனிவாசன், கே. பாலசுப்ரமணியன், டைலர் துரைசாமி மற்றும் பலருடன் ஊருக்கு வெளியே தனியாக இருக்கும் வாழைக் கொல்லையில் இருக்கும் தண்ணீர் மிஷின் கட்டிடத்தை சோதனையிட்டதில் உரமென்று கூறப்பட்ட சாதாரண உப்பு 25½ மூட்டைகள் இருந்தது கண்டுபிடிக்கப்பட்டு அவை கைப்பற்றப்பட்டன.

அங்கிருந்த காவல்காரர் ரங்கசாமி நாயுடுவை டிப்டி தாசில்தார் விசாரித்ததில் மேற்படி இடம் மெய்யப்ப செட்டியார் இடம்தான் என்றும், அவருடைய உத்திரவின் பேரில்தான் மேத்தான் சின்னப் பிள்ளை இந்த மூட்டைகளை இங்கு வைத்திருக்கிருர் என்றும் அந்த காவல்காரர் எழுத்துமூலம் வாக்குமூலம் கொடுத்துள்ளார்.

பிறகு மேத்தான் சின்னப் பிள்ளையை விசாரித்ததில், அரியலூர் மேலத்தெருவிலிருக்கும் மருத்து உடையார் தம்பி ஆறுமுகத்து உடையாரிடமிருந்து மூட்டை ரூ. 43 என்று வாங்கி, ரூ. 45 வரை விற்பனை செய்வதாகவும், சில்லரையில் ஒரு படி ரூ. 1-50க்கு விற்பதாகவும் டிப்டி தாசில்தாரிடம் எழுத்துமூலம் வாக்குமூலம் கொடுத்து, மூட்டை வாங்கின வீட்டையும் அடையாளம் காட்டினுர்.

இது சம்பந்தமாக அன்று பல இடங்களில் சோதனை போட்டதில் மொத்தம் 35½ மூட்டைகள் பிடிபட்டன. அதில் 25½ மூட்டைகள் டிப்டி தாசில்தார் ஆபீசில் பூட்டி சீல் வைக்கப்பட்டன. மற்ற மூட்டைகள், மூட்டைகள் வைத்திருந்தவர்களிடமே ஒப்புவிக்கப்பட்டு, டிப்டி தாசில்தார் எழுத்துமூலம் வாக்குமூலம் வாங்கியுள்ளார்.

நிற்க, உப்பு மூட்டைகளை உர மூட்டையின் மிஷின் தையல் போல் தைத்த செருப்பு தைக்கும் தொழிலாளி ரெங்கனும், மற்றும் கருடசேரி, குமரசாமி, கல்லக்குடி பரமசிவம் ஆகியோர் கொடுத்துள்ள வாக்குமூலத்திலிருந்து அரியலூரில் உள்ள பிரபல கமிஷன் மண்டிக்காரர்களாகிய கோபால கிருஷ்ண கமிஷன் மண்டியின் பங்குதாரர்களாகிய கோபாலகிருஷ்ண செட்டியார் மருதமுத்து உடையார், மேற்படி கோபாலகிருஷ்ணன் சாக்குக் கடையில் வேலைக்கிருக்கும் ஆறுமுகத்து உடையார் ஆகியோர் இந்த மோசடியில் சம்பந்தப் பட்டவர்கள் என்று கூறப்படுகிறது.

இவர்கள்மீது டிப்டி தாசில்தார் செக்ஷன் 415 படியும் பி. டி. ஓ. செக்ஷன் 415–420 படியும் உடனடி நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று போலீசாருக்கு எழுதி விட்டார்கள். ஆனுல் போலீசார் இன்னும் எவ்வித நடவடிக்கையும் எடுத்ததாகத் தெரியவில்லை.

இம்மாதிரி மோசடியாக உரமென்று உப்பு மூட்டைகளை விற்றதின் மதிப்பு சுமார் ரூ. 50,000 இருக்குமென்று கருதப்படுகிறது.

இந்த சாதாரண உப்பை உரமென்று வாங்கி உபயோகப்படுத்தியதின் விளைவாக நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலங்களில் உள்ள பயிர்கள் நாசமாக்கப்பட்டு, அந்த நிலங்கள் மேலும் சாகுபடிக்கு லாயக்கற்றதாகி, களர் படிந்துவிடுமென்றும், அந்த நிலங்களில் மேற்கொண்டு எப்படி பயிரிடுவதென்று இங்குள்ள விவசாயிகள் கவலையடைந்திருக்கின்ருர்கள்.

உப்புமூட்டை வாங்கிய விவசாயிகள் தினம் அரியலூர் வந்து கம்யூனிஸ்ட் கட்சித் தோழர்களிடமும், அதிகாரிகளிடமும் தங்கள் குறைகளை எழுத்து மூலமாகக் கொடுத்துவருவதாகத் தெரிகிறது

இது சம்பந்தமாக அரியலூரில் உள்ள சர்வ கட்சியினரும் (காங்கிரஸ் உட்பட) பஞ்சாயத்து போர்டு உறுப்பினர்களில்சிலரும், மற்றும் பலரும் ஒன்றுபட்ட முறையில் நடவடிக்கைகள் எடுத்து வருவதாகத் தெரிகிறது.

# ஜப்பானிலுள்ள கொரிய மக்கள் தாயகம் திரும்புகிருர்கள்

## சோவியத் கப்பல்களில் பயணம்

டோக்யோ, டிச. 16—
ஜப்பானிலிருந்து 975 கொரியா மக்கள் நேற்று தங்கள் தாயகத்திற்குப் பயணமானுர்கள். இரண்டு சோவியத் கப்பல்கள் அவர்களை ஏற்றிக்கொண்டு வட ஜப்பான் துறைமுகமாகிய நிகடாவிலிருந்து புறப்பட்டுச் சென்றது.

யுத்தத்தின் போது ஜப்பான் இவர்களைப் பிடித்துக் கொண்டு சென்றது. அவர்கள் வட கொரியாவுக்குச் செல்ல விரும்பியதன் பேரிலேயே புறப்பட்டுச் செல்கிருர்கள் என்று ஜப்பான் செஞ்சிலுவைச்சங்க அதிகாரிகள் தெரிவித்தனர்.

ஜப்பானிலிருந்து வட கொரிய குடியரசிற்குத் திரும்ப விரும்பும் மக்களை அனுப்பி வைப்பது பற்றி கடந்த ஆகஸ்டு மாதம் கல்கத்தாவில் வடகொரிய குடியரசுப் பிரதிநிதிகளுக்கும், ஜப்பான் செஞ்சிலுவைச் சங்கப் பிரதிநிதிகளுக்கும் பேச்சுவார்த்தை நடைபெற்றது நினைவிருக்கலாம்.

இவ்வாண்டு இறுதிக்குள் மேலும் 3000 கொரிய மக்கள் தங்கள் தாயகம் திரும்புகிருர்களென்று தெரிகிறது.

# ஏகாதிபத்தியவாதிகளின் உறவை முறித்துக்கொள்க

## இஸ்ரேல் அரசிற்கு கம்யூனிஸ்டு பாராளுமன்ற உறுப்பினர்கள் அறிவுரை

டெல் அவிவ், டிச. 15—
"நாட்டின் நலனைக் கருதி, வீரஅராபிய மக்களுக்கு முன்னே முறிந்து விழுந்து கொண்டிருக்கும் காலனி ஆதிக்க வெறியர்களோடு இஸ்ரேல் எவ்வித உடன்பாடும், உறவும் வைத்துக் கொள்ளக்கூடாது" என்று இஸ்ரேல் கம்யூனிஸ்ட் கட்சியின் பாராளுமன்றக் குழுவினர் ஒரு அறிக்கையில் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டுள்ளார்கள்.

### யார் பக்கம்?

மத்திய கிழக்குப் பிரதேசத்தில் ஏகாதிபத்தியவாதிகளின் கைப் பொம்மையாக, அரபு நாடுகளை அச்சுறுத்தும் தளமாக இன்று இஸ்ரேல் இருந்து வருகிறது. பிரிட்டன், பிரான்சு ஆகிய ஏகாதிபத்திய நாடுகளுக்கு உறுதுணையாக இஸ்ரேல்தான் எகிப்தின்மீது படையெடுத்தது என்பதை வாசகர்கள் அறிவார்கள். இந்த நாட்டினைத்தான் இந்தியாவிலுள்ள பி. சோ. கட்சியினரும், சர்வோதய இயக்கத்தில் ஜெயப்பிரகாஷ் நாராயணனைப் பின்பற்றுகிறவர்களும் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு ஆடுகிருர்கள். இஸ்ரேலில் காந்தி கண்ட கிராம ராஜ்யம் மலர்ந்திருப்பதாக பறையடித்துக் கொண்டிருக்கிருர்கள்.

### ஆசிய நாடுகளுக்கு விரோதமாக

இஸ்ரேல் கம்யூனிஸ்ட் கட்சியின் பாராளுமன்றக் குழுவினர் மேலும்தமது அறிக்கையில்ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளுக்கு விரோதமாகவோ, சோஷலிச நாடுகளுக்கு விரோதமாகவோ இஸ்ரேல் அரசு ஏகாதிபத்தியவாதிகளுடன் கை கோர்த்துக் கொண்டு நிற்பதைத் தவிர்க்க வேண்டும்.

### பாசிசக் கட்சிகளுக்கு இடமில்லை

"முன்னுல் இருந்த அரசாங்கம் நாட்டின் நலனுக்கும், தொழிலாளி வர்க்கத்தின் நலனுக்கும் விரோதமாக பிற்போக்குக் கொள்கையைப் பின் பற்றி வந்தது. எனவே புதிய அமைச்சரவையில் பாசிச, பிற்போக்கு, பூர்ஷ்வா கட்சிகள் இடம் பெறுவதை கம்யூனிஸ்டுக் கட்சி எதிர்க்கும். புதிதாக அமையும் அரசு பழைய அரசின் கொள்கையைக் கைவிடவேண்டும்.

### ஏகாதிபத்தியத்திற்குப் பணிவதா?

"இதற்கு முன்னர் ஆட்சிப் பீடத்திலிருந்த அரசு இராணுவ ரீதியாகவும், அரசியல்ரீதியாகவும் ஏகாதிபத்தியத்திற்குப் பணிந்து பாதந் தாங்கியாக விளங்கியது, அல்ஜீரியாவிற்கு சுதந்திரம் அளிக்க வேண்டாம் என்று கூறியது; ஐ. நா. வில் வாக்களித்தது. சஹாராவில் பிரான்சு அணுகுண்டுச் சோதனை செய்வதை ஆதரித்தது! இங்ஙனம் ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளுக்கு விரோதமாக நின்றது.

### கம்யூனிஸ்டுக் கட்சியின் கொள்கை

"இஸ்ரேல்எந்தவெளிநாட்டையும் சார்ந்து நிற்காது, நடுநிலைக் கொள்கையில் நின்று, அரபு நாடுகளுடன் உறவுடன் வாழ்வதைத்தான் கம்யூனிஸ்ட் கட்சி விரும்புகிறது. அக்கொள்கைக்கே என்றும் உறுதியாக நின்று பாடுபடும்" என்று கூறுகிறது.

## "தொழிற்சங்க செய்தி"

### டிசம்பர் மாத இதழ்

தமிழ் நாடு தொழிற்சங்க காங்கிரசின் மாத வெளியீடான "தொழிற்சங்க செய்தி"யின் 1959 டிசம்பர் மாத வெளியீடு வெளியாகியுள்ளது. 16 பக்கங்கள்: விலை 15 காசுகள்.

இந்த இதழில் பல முக்கிய கட்டுரைகள் வெளியாகியுள்ளன.

விலைவாசி உயர்வை எதிர்த்து நடைபெறும் இயக்கத்தில் தொழிலாளி வர்க்கம் முன்னணியில் நிற்க வேண்டுமென்று தலையங்கம் வற்புறுத்துகிறது.

மத்திய சம்பளக் கமிஷன் சிபார்சுகள் எவ்வாறு உள்ள உரிமைகளையும் பறிக்கின்றன என்பதை ஒரு கட்டுரை விளக்குகிறது.

மேலும்:

—'தொழிற் சங்கங்களின் கவனத்திற்கு, அங்கத்தினர் சரிபார்த்தல் பற்றி.

—5 லட்சம் அமெரிக்க எ.்.குத் தொழிலாளரின் புகழ்பெற்ற வேலைநிறுத்தம்.

—மனிதனும் இயந்திரங்களும் (ஜி. குலிகோவா)

—போனஸ் பெறுவதெப்படி? (சேலம் ஜி. சாமுவேல்).

தேயிலைத் தோட்டங்களில் வேலை முதலிய முக்கியமான கட்டுரைகளும், சம்பள போர்டுகள், இந்தோனேஷியத் தொழிற்சங்க தூதுகோஷ்டி, உலகத் தொழிற்சங்க சம்மேளனத்தின் 14வது ஆண்டு விழா முதலிய செய்திகளும் இந்த இதழில் அடங்கியுள்ளன.

ஒவ்வொரு தொழிலாளியும், ஒவ்வொரு தொழிற்சங்கவாதியும் அவசியம் வாங்கிப் படிக்கவேண்டிய இதழ்.

கிடைக்குமிடம்: தமிழ்நாடு தொழிற்சங்கக் காங்கிரஸ் காரியாலயம், 6/157 பிராட்வே, சென்னை-1.

வி. ஆர்.

★

## புத்தக விமர்சனம்

### MADRAS (in Maps & Pictures)

(வெளியிட்டோர்: டைரக்டர், சென்னை செய்தி, விளம்பரத்துறை விலை ரூ. 2/-)

"நில நூலார் கருத்துப்படி உலகின் மிகப் பழமையான நிலப் பகுதி, மனித நாகரிகத்தின் தொட்டில் என பெரும் ஆராய்ச்சியாளர் நிறுவியுள்ளனர். 'துணி நெய்வதிலும் முத்து வளத்திலும் சிறந்த குபேர நாடு' என மெகஸ்தனீஸ் போற்றிய நாடு இத் தமிழ் நாடு. இது மனித நாகரிகத்தின் தொட்டில்" என்று தொடங்கும் இவ் வெளியீட்டில் இலக்கியம், கலை, சிற்பம், கட்டிட நிர்மாணம், அரசியல் நிர்வாகம், இறுதியில் வெள்ளையரிடமிருந்து விடுதலை பெற நடைபெற்ற சுதந்திரப் போராட்டம் ஆகியவற்றில் தமிழகத்தின் பங்கு முதலியவை இதில் சுருக்கமாக விளக்கப்பட்டிருக்கின்றன.

தமிழ் மாநிலத்தின் (சென்னை ராஜ்யம்) மக்கள் தொகை, நிலப் பரப்பு, அண்டை மாநிலங்களைப் பற்றிய செய்திகள், மழை யளவு, வெப்ப நிலை, ஐந்தாண்டுத் திட்டங்கள், வருமான, செலவினங்கள், நிர்வாக விபரங்கள், பயிர்த் தொழில், நிலச்சீர்திருத்தங்கள், கால் நடைப் பாதுகாப்பு, பால் வினியோகம், மீன்வளம், சமுதாயத் திட்ட வளர்ச்சி, நீர்ப் பாசனம், மின்சார வசதி, கல்வி, வைத்திய வசதிகள், மதுவிலக்கு, கூட்டுறவு, தொழில்கள், கனி வளங்கள், கதர் உற்பத்தி, தொழிலாளர் நலன்களுக்கான திட்டங்கள், குடியிருப்பு வசதிகள், தாழ்த்தப்பட்டோர் நலன்கள், போக்குவரத்து, முதலிய அம்சங்களைப் பற்றி ரத்னச் சுருக்கமான விபரங்கள் தரப்பட்டுள்ளன.

மாநிலத்திலுள்ள வரலாற்றுச் சிறப்புடைய மதுரை நாயக்கர் அரண்மனை, மீனுட்சியம்மன் கோவில், ராமேஸ்வரம், தஞ்சை பெரிய கோவில், மகாபலிபுரம், தெனகாசிச் சிற்பங்கள், காஞ்சிக் கோவில், சுசீந்திரம் கோவில் முதலியனவற்றின் படங்கள் இவ் வெளியீட்டில் காணப்படுகின்றன. குற்ருலம், கோடைக் கானல், உதகை முதலிய இடங்களைப் பற்றிய விளக்கங்களும் இவ் வெளியீட்டில் இடம் பெற்றுள்ளன.

ஓவியர் மணியத்தின் எழில் மிக்க முகப்புச் சித்திரங்கள் இவ் வெளியீட்டை அழகுபடுத்துகின்றன.

விளக்கப் படங்களும் நிலப் படங்களும் ஏராளமான அளவில் சேர்க்கப்பட்டிருக்கும் இவ் வெளியீடு தமிழிலும் வெளியிடப்பட்டிருக்கிறதா என்பது தெரியவில்லை.

உடையார் பாளையம் தாலுகா

# பஞ்சாயத்து கவுன்சில் தேர்தல் முடிவுகள்

அரியலூர், டிச. 15—
திருச்சி மாவட்டம் உடையார் பாளையம் தாலுகா தி'பழூர் பிர்க்கா பஞ்சாயத்து யூனியன் தேர்தல் 10-12-59-ல் தி'பழூரில் நடைபெற்றது.

போட்டியிட்ட நால்வரில் கச்சபெருமாள் நத்தம் கோவிந்தசாமி என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

தோல்வியடைந்தவர்களில் உடையார்பாளையம் தாலுகா மண்டலக் காங்கிரஸ் கமிட்டியின் உப-தலைவர் வக்ரமாரி ராமலிங்கம் என்பவரும் ஒருவர்.

### ஜெயங்கொண்டம் பிர்க்கா

ஜெயங்கொண்டம் பிர்க்கா பஞ்சாயத்து கவுன்சில் தேர்தலில் உட்கோட்டை ராகவன் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப் பட்டார். இங்கும் காங்கிரஸ்காரர் வெற்றிபெறவில்லை.

### அரியலூர் பிர்க்கா

அரியலூர் பிர்க்கா பஞ்சாயத்து கவுன்சில் தேர்தல் 12-12-59ல் நடைபெற்றது. போட்டியிட்ட மூவரில் ராயம்புரம் பஞ்சாயத்து தலைவர் திரு. முருகேசன் வெற்றிபெற்ருர்.

## கவர்னர் உரை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

டார். அவர் எந்த சபையிலும் அங்கம் வகிக்கக் கூடாது, முடியாது. விவாதங்களில் கலந்துகொள்ள முடியாது. வோட்டுப் போடமுடியாது.

### முக்கிய பிரச்சினை

இம்மாதிரியான விஷயங்களில் நாம் ஜாக்கிரதையாக நடந்து சம்பிரதாயங்கள் ஏற்படுத்த வேண்டும். கவர்னருக்கும் சபைக்கும் மரியாதை காட்டப்பட வேண்டியது அவசியமே. ஆனல் அந்த மரியாதை நமது நடத்தையின் தன்மை கண்டு, பூரிப்படைந்து மக்கள் தாமாகவே கொடுப்பதாக இருக்க வேண்டும்.

அரசியல் சட்ட அமைப்பு மக்களுக்காகவே. அதில் புனிதத்தன்மை எதுவுமில்லை. அவ்வப்போது சூழ்நிலைக்கு ஏற்ப அது திருத்தப்படலாம். கவர்னர் பதவி நியமனப் பதவியாக இருக்கக்கூடாது என்று ஒரு சாரார் அரசியல் சட்டத்தை திருத்தவேண்டுமெனக் கண்டனக் குரல் எழுப்பினல் அது தவருக எப்படிக் கருதப்படக்கூடும்?

இதற்கு முன்னுல் இந்தப் பிரச்சினை வேறு ரூபத்தில் வந்திருக்கிறது. முந்திய சட்டசபையில் காலஞ்சென்ற பிரகாசம் கவர்னர் உரையின்போது பல பிரச்சினைகளை எழுப்பி குறிப்பிட்ட காலத்தில் கவர்னர் உரை நிகழ்த்த முடியாதபடி செய்ய வில்லையா? தி. மு. க. அங்கத்தினர்கள் அப்படி ஒன்றும் செய்ய வில்லை. கூட்டத்திற்கே வரவில்லை அவ்வளவுதான். கவர்னர் சட்ட சபையைக் கூட்டுவது கோர்ட்டு அனுப்பும் 'சம்மன்' மாதிரியாகாது. உரையின்போது வராவிட்டால் அது சபையின் உரிமைகளை பாதிப்பதாகவும் ஆகாது. சின்ன விஷயத்தை பெரிதுபடுத்த வேண்டாம்" என்று தோழர் கல்யாணசுந்தரம் கூறினர்.

## புனர் வாழ்வுத் துறை மந்திரி ராஜினமா செய்யவேண்டும்

புதுடெல்லி, டிச. 15—

மேற்கு வங்காளத்திலுள்ள அகதிகள் புனர் வாழ்வுத் திட்டமான தண்டகாரண்யத் திட்டத்தில் ஏற்பட்டுள்ள படுமோசமான ஊழல்களின் காரணமாக புனர் வாழ்வுத்துறை மந்திரி மெஹர்சந்த் கன்ன ராஜினமாச் செய்யவேண்டும் என்று ராஜ்ய சபையில் கம்யூனிஸ்ட் உறுப்பினர் பூபேஷ்குப்தா கோரினர்.

## இன்றைய சினிமா

அசோக்—ஜவானி-கி-ஹவா
பாரத்—அருமை மகள் அபிராமி
பிரைட்டன்—அபலை
அஞ்சுகம்
பிராட்வே—சகோதரி
காஸினே—
பொன் விளையும் பூமி
சித்ரா—பாகப் பிரிவினை
கிரௌன்—பாகப் பிரிவினை
ஈராஸ்—கடன் வாங்கி கல்யாணம்
கெயிட்டி—சகோதரி
காமதேனு—சபாஷ் ராமு
கபாலி—மரகதம்
கிருஷ்ணு—அமுதவல்லி
லக்ஷிமி—அவள் யார்?
மஹாலக்ஷ்மி—அருமை மகள் அபிராமி
மஹாராணி—சபாஷ் ராமு
மிட்லண்ட்—Ten Thousand Bed Rooms
மினர்வா—The Angry Hills
நியூ க்ளோப்—Hercules
நியூ எல்பின்ஸ்டன்—Perri
நூர்ஜஹான்—மரகதம்
ஓடியன்—The Vikings
பிளாஸா—சோடி பேஹன்
பத்மனுபா—ஹரிதாஸ்
பாரகன்—யானை வளர்த்த வானம்பாடி
பிரபாத்—பொன் விளையும் பூமி
ராஜகுமாரி—அமுதவல்லி
ராக்ஸி—சகோதரி
செலக்ட்—செஞ்சு லக்ஷ்மி
சரஸ்வதி—பொன் விளையும் பூமி
சயானி—பாகப் பிரிவினை
ஸ்டார்—தில்-தேகே-தேகோ
சன்—வீர கடோத்கஜன்
தங்கம்—வீரகடோத்கஜன்
பிரதாப்—வாழ்க்கை ஒப்பந்தம்
திருமகள்—தெய்வமே துணை
உமா—சபாஷ் ராமு
வீனஸ்—வீரபாண்டிய கட்டபொம்மன்
வெலிங்டன்—சர்வாதிகாரி
அரக்கோணம்: கற்பகம்—
உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்
தாம்பரம்: G. R. தியேட்டர்—அமுதவல்லி
வேலூர்: நேஷனல் தியேட்டர் பாகப் பிரிவினை
பல்லாவரம்-ஜனதா—யானை வளர்த்த வானம்பாடி

## டெலிபிரிண்டர் சர்வீஸை முறையற்ற உபயோகம் செய்த இந்தியன் எக்ஸ்பிரஸ் நிர்வாகம்

### ராஜ்ய சபையில் பூபேஷ் விளாசல்

புதுடில்லி, டிச. 14—

"இந்தியன் எக்ஸ்பிரஸ்" (சென்னை) டெலிபிரிண்டர் சர்வீஸை முறையற்ற உபயோகம் செய்தது உண்மைதான் என்றும் இதன் மீது ரூ. 2,345 அபராதம் விதிக்கப்பட்டது எனவும் பிரஸ் கட்டணங்கள் அனுமதிக்கப்பட்ட இனங்கள் தவிர பிற செய்திகளை அனுப்ப டெலிபிரிண்டர் சர்க்யூட்டுகளை உபயோகப்படுத்தியதாலேயே இவ்வபராதம் விதிக்கப்பட்டது எனவும் ராஜ்ய சபையில் யூனியன் செய்திப் போக்குவரத்துத் துறை அமைச்சர் டாக்டர் பி. சுப்பராயன் அறிவித்தார்.

தோழர் பூபேஷ் குப்தாவின் கேள்வியொன்றுக்கு பதிலளிக்கையிலேயே அமைச்சர் மேற்கண்டவாறு கூறினர்.

பூபேஷ் குப்தா: அபராதம் விதிக்கப்பட்டது சரிதான். முறை தவறியது எப்போது எனக் கூற முடியுமா?

டாக்டர் சுப்பராயன்: அபராதம் விதிக்கப்பட்ட பின், அப்பீல் ஒன்று செய்யப்பட்டுள்ளது. அதை நான் பரிசீலித்துக் கொண்டிருக்கிறேன்.

பூபேஷ்: பிரஸ்தாபக் குற்றம் எப்பொழுது நடைபெற்றது?

டாக்டர் சுப்பராயன்: தேதி சரியாகத் தெரியவில்லை.

பூபேஷ்: அபராதம் விதிக்கப்பட்ட பின்னரும் தனிப்பட்ட வியாபார விஷயங்களுக்காக டெலிபிரிண்டர் சர்வீஸ் உபயோகப்படுத்தப்படுவது அமைச்சரின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டதா? இந்த விஷயம் பூராவையும் பற்றி இங்கே அசல் பிரதிகள் உள்ளன. "இரண்டுதரப் பாருக்குமிடையே கொடுக்கல் வாங்கல் இன்று பூர்த்தியாயிற்று. "பாபு தூங்கிக் கொண்டிருக்கிறர். பி. டி. கோயங்காவிடமிருந்து என்ன செய்யவேண்டுமென்பதை அறியவும். "இந்தியாபாங்குடன்ரூ.15 லட்சம்வரை வைத்து ரூ. 20 லட்சம் வரை ஏற்பாடு செய்யவும், பம்பாய்க்கும் இது விஷயத்தைத் தெரிவிக்கவும்" போன்ற செய்திகளை அனுப்பவும் அனுமதிக்கத் தக்கதா?

சபைத்தலைவர்: கேள்வி நேரம் முடிந்துவிட்டது.

பூபேஷ்: இன்னும் கூறவேண்டியதிருக்கிறது. கல்கத்தா, சென்னை, பம்பாய் முதலிய இடங்களுக்கிடையே செய்திகள் பலவும் அனுப்பப்பட்டுள்ளன.

சபைத்தலைவர்: இது சம்பந்தமான தகவல்கள் சபையில் வைக்கப்படும்.

பூபேஷ்: அப்படியானல்......

சபைத்தலைவர்: அப்படியானல் அதன்மீது அரை மணிநேர விவாதம் இருக்கும்.

## கேரள தேர்தல் நிதி

சென்னை, டிச. 16—

கேரள தேர்தல் நிதிக்கு ஜனசக்தி, மாகாண கமிட்டி அலுவலகத் தோழர்கள் நன்கொடை வழங்கியுள்ளார்கள். நன்கொடை வழங்கிய தோழர்களின் விபரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது:

| | |
|---|---|
| ஜீவா | ரூ. 10 |
| கே. ராமநாதன் | ரூ. 10 |
| ஆர். மேரி | ரூ. 10 |
| ஐ. மாயாண்டி பாரதி | ரூ. 10 |
| சுப. ஞானவடிவேலன் | ரூ. 10 |
| டி. செல்வராசு | ரூ. 10 |
| எஸ். தியாகராஜன் | ரூ. 10 |
| சோலை | ரூ. 10 |
| எஸ். கிருஷ்ணசாமி | ரூ. 5 |
| வி. ராதாகிருஷ்ணன் | ரூ. 5 |
| ஆர். கணேசன் | ரூ. 5 |
| ராமசாமி | ரூ. 5 |
| வி. பாலசுப்பிரமணியம் | ரூ. 5 |
| கே. முத்தையா | ரூ. 5 |
| ப. சிவசிதம்பரம் | ரூ. 5 |
| கே. ஏ. சாரி | ரூ. 5 |
| மின்னல் | ரூ. 5 |
| பி. நல்லதம்பி | ரூ. 5 |
| கே. நாராயணன் | ரூ. 5 |
| வி. ராமச்சந்திரன் | ரூ. 5 |
| ஜி. சோமசுந்தரம் | ரூ. 3 |
| கோ. க. புவியரசு | ரூ. 3 |
| டி. எஸ். தினகரன் | ரூ. 3 |
| ஆர். வி. ராஜேந்திரன் | ரூ. 3 |
| ஆர். ராஜாராம் | ரூ. 3 |
| எஸ். கே. துக்காராம் | ரூ. 3 |
| எஸ். பாலசுப்பிரமணியம் | ரூ. 2 |
| மு. இசக்கி | ரூ. 2 |
| சீ. பூஞ்சோலை | ரூ. 2 |
| ஜே. ரத்தினம் | ரூ. 2 |
| எம். என். நாராயணன் | ரூ. 2 |
| வி. ஆர். பஞ்சாட்சரம் | ரூ. 1 |
| கே. வரதராஜன் | ரூ. 1 |
| மொத்தம் | ரூ. 170 |

## சேலம்:

## யுரேனியப் படிவங்கள்

### மக்கள் சபையில் தகவல்

புதுடில்லி, டிச. 15—

சேலம் ஜில்லாவில் கிடைக்கும் யுரேனியப் படிவங்களிலிருந்து சிறிதளவு கதிரியக்கப் பொருள் (ரேடியோ-ஆக்டிவ் மெடீரியல்) சேகரிக்கப்பட்டிருப்பதாக இன்று மக்கள் சபையில் அறிவிக்கப்பட்டது.

யுரேனியப் படிவங்களைத் தோண்டியெடுக்கும் வேலை மேலும் நடைபெற்று வருகிறதெனவும் இதன் தர நிர்ணயம் பற்றி தீவிர பரிசீலனை நடைபெறுகிறதெனவும் அப் பதிலில் கூறப்பட்டுள்ளது.

திரு. சி. ஆர். நரசிம்மனுக்கு எழுத்துமூலம் அளித்த பதிலொன்றில் வெளி விவகாரத் துறை அமைச்சரின் பார்லிமெண்டரி செயலாளர் மேற்கண்டவாறு அறிவித்துள்ளார்.

## 18,364 ஏக்கரா நைஜாமிற்கு சொந்தம்

### ரூ. 1,25,460 வரி செலுத்தாது 'டிமிக்கி' கொடுக்கிருர்

ஹைதராபாத், டிச. 16—

"ஹைதராபாத் நைஜாமின்பெயரால் மட்டும் அவருக்கு 18,364 ஏக்கரா சொந்தமாக இருக்கிறது" என்று ஆந்திரா ரெவின்யூ அமைச்சர் சட்டமன்றத்தில் ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் கூறினர்.

18364 ஏக்கராவில் 3,614 ஏக்கராதான் சாகுபடி செய்யப்படுவதாகவும், 14,750 ஏக்கரா மேய்ச்சல் தரிசுகளாக இருப்பதாகவும் அமைச்சர் மேலும் கூறினர். அவ் நிலங்களெல்லாம் சாகுபடிக்கு ஏற்ற நிலங்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

நைஜாமின் பெயரிலுள்ள நிலங்களுக்கு மட்டும் 13,828 ரூபாய் நிலவரி விதிக்கப்படுகிறது. ஆனல் கடந்த 32 ஆண்டுகளாக ஒரு லட்சத்து 25 ஆயிரத்து 460 ரூபாய் வரி செலுத்தாமல் நைஜாம் 'டிமிக்கி' கொடுத்துக்கொண்டுவருகிருர். இந்தத் தகவலையும் அமைச்சரே சட்டமன்றத்தில் வெளியிட்டார்.

## மின்சார தொழிலாளர்கள் ஆட்சேப வேலைநிறுத்தம்

சென்னை, டிச. 15—

நேற்று திடீரென்று 700க்கு மேற்பட்ட மின்சார ஊழியர்கள் கண்டன வேலைநிறுத்தம் செய்தார்கள்.

காலை நேரங்களில் எதிர்பாராத விதமாக தாமதமேற்பட்டால் வேலை நேரத்தைவிட 15 நிமிடங்கள் தாமதமாக வரலாம் என்பன போன்ற சலுகைகள் மறுக்கப்பட்டதாலும், சில அதிகாரிகள் ஊழியர்கள் ஆத்திரமூரும் வண்ணம் தவருகப் பேசியதாலுமே வேலைநிறுத்தம் நடைபெற்றது. பேசின்பிரிட்ஜிலுள்ள பவர் ஹவுசிலுலேயே இவ் வேலைநிறுத்தம் நடைபெற்றது.

பின்னர் சென்னை மின்சாரத் தொழிலாளர் சங்கத்தின் பொதுச் செயலாளர் தோழர் எஸ். சி. கிருஷ்ணன் தலைமையில் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் ஐவர் சூப்பரெண்டெண்டிங் என்ஜினீயரைச் சந்தித்தனர். 15 நிமிட நேரம் தொழிலாளர்கள் கால தாமதமாக வருவதை அனுமதிப்பதாக என்ஜினியர் தெரிவித்தார். பின்னர் பிறவிஷயங்கள் பற்றி தொடர்ந்து பேச்சுவார்த்தைகள் நடைபெறுமென்று தெரிகிறது.

## நடக்கவிருப்பவை

### அகில இந்திய எழுத்தாளர் மாநாடு 17-12-59 கருத்தரங்கம்

தேனும்பேட்டை, எஸ். ஐ. இ. டி. கல்லூரி ஐந்தாம் எண்ணுள்ள அறையில் "இந்திய மரபும், தற்கால எழுத்தாளர்களும்" என்னும் பொருள்பற்றி விவாதம் நடைபெறும். திரு. என். ரகுநாத அய்யர் விவாதத்தை துவக்கி வைப்பார். திரு. மாஸ்தி வெங்கடேச அய்யங்கார் தலைமை தாங்குவார். காலம்: காலை 8-30 மணி. எட்டாம் எண்ணுள்ள அறையில் திரு. ஜே. எல். கவுல் தலைமையில் "தற்கால இலக்கியப் போக்குகள்" என்பது பற்றி விவாதம் நடைபெறும்.

19-ம் எண்ணுள்ள அறையில் "இலக்கியமும் மக்கள் உறவும்" என்னும் பொருள் பற்றி விவாதம் நடைபெறும். திரு. மாமா வரேர்கர் தலைமை வகிப்பார்.

## மைசூர், பங்களூர், பெல்லாரி கல்லூரிகளும் மூடப்பட்டன

### மாணவர்கள் ஆர்ப்பாட்டமே காரணமாம்

பங்களூர், டிச. 16—

மைசூர், பங்களூர் ஆகிய நகரங்களிலுள்ள எல்லாக் கல்லூரிகளும் மூடப்படும் என்று மைசூர் பல்கலைக் கழக சிண்டிகேட் நேற்று அறிவித்தது.

எல்லாக் கல்லூரிகளும் ஜனவரி இரண்டாம் நாள் வரை மூடப்படும். மைசூர் நகரில் பல்கலைக் கழக வாலிபர் விழாவில் கல்லூரி மாணவர்கள் இலவசமாக அனுமதிக்கப்பட வேண்டுமென்று மாணவர்கள் கோரியதும், கல்லூரிகளுக்குச் செல்லாமல் ஆர்ப்பாட்டம் நடத்தியதும், போலீசார் இருமுறை மாணவர்கள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்ததும் வாசகர்கள் அறிந்ததே. அதனைத் தொடர்ந்தே இரு நகரங்களிலுமுள்ள எல்லா கல்லூரிகளும் மூடப்பட்டுவிட்டன.

மைசூர், பங்களூர் கல்லூரி மாணவர்களுக்கு ஆதரவாக பெல்லாரி கல்லூரி மாணவர்களும் அடையாள வேலைநிறுத்தம் செய்தார்கள். அதனுல் அக் கல்லூரியும் நேற்று முதல் மூடப்பட்டுவிட்டது. இம்மாதம் முழுவதும் கல்லூரிக்கு விடுமுறை என்று வீரசைவா கல்லூரி முதல்வர் அறிவித்திருக்கிருர். அதனுல் நேற்று ஆரம்பமாகவிருந்த அரையாண்டுத் தேர்வும் ஒத்திவைக்கப்பட்டுள்ளது.

மைசூரிலும், பங்களூரிலும் பூரண அமைதி நிலவுவதற்கு பொதுமக்கள் ஒத்துழைக்க வேண்டுமென்று எல்லா அரசியல் கட்சித் தலைவர்களும் கையொப்பமிட்டு ஒரு கூட்டு அறிக்கை வெளியிட்டிருக்கிருர்கள். அவ்வறிக்கையில் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பாக தோழர் என். எல். உபாத்யாயா கையொப்பமிட்டுள்ளார்.

ஏற்கனவே அலகாபாத் பல்கலைக் கழகமும், லட்சுமணபுரி பல்கலைக்கழகமும் மூடப்பட்டது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம்.

## சர்வதேச திரைப்பட டெலிவிஷன் கவுன்சில்

### இந்திய ஆலோசகராக திரு. கே. சுப்ரமண்யம்

சென்னை, டிச. 15—

யுனெஸ்கோ ஸ்தாபனத்தின் சர்வதேச திரைப்பட, டெலிவிஷன் கவுன்சிலின் தலைவர் ஜான் மாடிசன் இந்தியாவில் மேற்படி கவுன்சிலின் ஆலோசகராக டைரக்டர் கே. சுப்ரமண்யம் அவர்களை நியமித்துள்ளார் என்று அறிவிக்கப்படுகிறது.

## தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவராக திரு. கா. அப்பாத்துரை தேர்வு

சென்னை, டிச. 15—

1960ம் ஆண்டுக்குத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராக திரு. கா. அப்பாத்துரை தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றுள்ளார். ஓட்டுகள் விவரம் வருமாறு:

| | |
|---|---|
| திரு. கா. அப்பாத்துரை | 111 |
| „ க. நா. சுப்ரமண்யம் | 110 |
| திரு. த. ஜெயகாந்தன் | 5 |
| மொத்தம் பதிவானவை | 226 |

புதிய தலைவர் 1960 ஜனவரி மாதம் பதவி ஏற்பார்.

## காமன்வெல்த் பிரதமர்கள் மகாநாடு

லண்டன், டிச. 14—

காமன்வெல்த் பிரதமர்கள் மகாநாடு அடுத்த மே மாதம் 3ந் தேதி லண்டனில் ஆரம்பமாகுமென்று பிரிட்டிஷ் பிரதமர் மாக்மிலன் அறிவித்திருக்கிறார்.

இம் மகாநாட்டிற்கு பாகிஸ்தான் ஜனதிபதி அயூப்கான் வருவாரென்று கராச்சி செய்தி கூறுகிறது.

## ஏற்றுமதி வர்த்தகத்தை சர்க்காரே நடத்தவேண்டும்

### கைத்தறி பிரதிநிதிகள் கூட்டத்தில் கோரிக்கை

சென்னை, டிச. 16—

16-12-59 புதன் பிற்பகல் 2 மணிக்கு தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் அலுவலகத்தில் தோழர் டி. ஆர். கணேசன் தலைமையில் கைத்தறி பிரதிநிதிகள் கூட்டம் நடைபெற்றது. சென்னை, செங்கல்பட்டு, வட ஆற்காடு, தென் ஆற்காடு, தஞ்சை ஆகிய இடங்களிலிருந்து 40 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். தோழர் கே. எஸ். பார்த்தசாரதி கைத்தறி ஜவுளி ஏற்றுமதி பற்றியும், குறிப்பாக அமெரிக்காவுக்கு ஏற்றுமதியாகும் கைத்தறி ஜவுளி தொழிலில் ஏற்பட்டுள்ள குழப்பத்திற்கு ஏற்றுமதியாளர்களே பொறுப்பாளிகள் என்றும், அவர்களால் கைத்தறி நெசவாளர்களும் நெசவுத் தொழிலாளிகளும் கஷ்டப்பட வேண்டியுள்ளதென்றும், தனிநபர்கள் மூலம் அமெரிக்காவுக்கு ஏற்றுமதியாவதை முறை ரத்தாக வேண்டுமென்றும், எக்ஸ்போர்ட் ஆர்கனேசேஷன் மூலம் இனி கைத்தறி ஜவுளி ஏற்றுமதி செய்யப்படவேண்டும் என்றும், விலை நிர்ணயம் செய்யப்பட வேண்டும் என்றும், அமெரிக்க ரகத்துக்கு கூலி குறைப்பதை கண்டித்தும் பேசினர்.

இதன் மீது நடந்த விவாதத்தில் தோழர்கள் கே. எம். கண்ணபிரான், சைதை சம்பந்தம், நாராயணசாமி எம். எல். ஏ., சி. (புதுவை) மார்க்கண்டேயலு எம். சி., (குயபாத்தம்) ஆர். ஏகாம்பரம் (புதுப்பேட்டை), ஈ. எஸ். பொன்னுசாமி (சத்வாச்சேரி) ஆகியோர் பேசினர்.

முடிவில் கீழ்க்கண்ட தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது:

அமெரிக்காவுக்கு கைத்தறி ஜவுளி ஏற்றுமதி வியாபாரிகள் 14-12-59-ல் ஒப்புக் கொண்டதை அமெரிக்க ஜவுளி வாங்க மறுத்து வருவதையும், இக் கூட்டம் வன்மையாக கண்டிக்கிறது. நெறியற்ற முறையில் நடந்துக் கொள்ளும் ஏற்றுமதி வியாபாரிகள் பொறுப்பிலிருந்து அமெரிக்க ஏற்றுமதி ஜவுளி வியாபாரத்தை அரசாங்கம் (எக்ஸ்போர்ட் ஆர்கனேசேஷன் மூலம் ஏற்றுமதி செய்யவேண்டுமென இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது. தற்போதுள்ள நெருக்கடியான நிலைமை அரசாங்கத்துக்கு சுட்டிக் காட்டி பரிகாரம் தேடவும், மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கவும்கீழ்கண்ட கமிட்டியை நியமித்துள்ளது.

கமிட்டி அங்கத்தினர்கள்: தோழர்கள்எஸ்.கிருஷ்ணமூர்த்தி, கே. எஸ். பார்த்தசாரதி, டி. ஆர். கணேசன், கே.எம்.கண்ணபிரான், சைதை சம்பந்தம், எம். ரங்கநாதன், ஆர். ஏகாம்பரம், நாராயணசாமி எம்.எல்.ஏ., ஈ. எஸ். பொன்னுசாமி, கா. மு. கணேசன், மார்க்கண்டேயலு, கி. ராமலிங்கம் ஆகிய 19 பேர்கள் கொண்ட கமிட்டி அமைக்கப்பட்டது. இக்கமிட்டி மேற்கொண்டு நடவடிக்கைகளை நிர்ணயிக்க நாளைய தினம் காலை 9 மணிக்கு கூடுவதென முடிவு செய்யப்பட்டது. தலைவர் முடிவுரைக்குப் பின் கூட்டம் முடிந்தது.

## அகில இந்தோனேஷிய சமாதான மகாநாடு

ஜாகர்தா, டிச. 16—

அகில இந்தோனேஷிய சமாதான மாநாடு வருகிற ஜனவரி 25 முதல் 31-ந் தேதி வரை பாண்டூங் நகரில் நடைபெறுமென்றும், உலக சமாதானத்துக்கு இந்தோனேஷியாவின் தொண்டு என்பது பற்றி ஜனதிபதி சுகர்னே அந்த மாநாட்டில் பேசுவார் என்றும், 500 பிரதிநிதிகள் வருவார்களென்றும், 12 நாடுகளிலிருந்து சகோதரப் பிரதிநிதிகள் பங்குகொள்வரென்றும் நவ சீனச் செய்தி கூறுகிறது.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

மூலையில் தோன்றிய ஒரே வழியாக இருக்கிறது.

மாநிலங்கள் இஷ்டப்பட்டால் அதாவது 75 சத வாக்காளர்களோ 99 சதவாக்காளர்களோ அல்லது 100 சத வாக்காளர்களோ கூடி இஷ்டப்பட்டால் பிரிந்துபோக உரிமை இருக்க வேண்டுமென்று சட்டத்தில் திருத்த வேண்டும். அப்படி சோவியத் நாட்டின் சட்டத்திலே இருக்கிறது. பிரிந்து போனர்களா என்று நீங்கள் என்னைக் கேட்கலாம். பிரிய வில்லை தான். அதற்குக் காரணம் அந்த சர்க்காரின் நேர்த்தியான ஆட்சி தான்!

ஒன்று சேருவது தான் மனித சுபாவம். நல்லாட்சி இருந்தால் பிரிவினை மனம் வராது. இதை சர்வகட்சித் தலைவர்கள் முன்பும், இம் மாமன்றத்தின் முன்பும் பகிரங்கமாகச் சொல்லுகிறேன்.

இப்படி ஒன்றுபட்டால் காங்கிரஸ் கேலி பேசாது. நிச்சயம் தேர்தலில் வெற்றி கிடைக்கும். என் கண் முன்னுல் வெற்றியின் அறிகுறிகள் தோன்றுகின்றன. வெற்றி நெருங்குகிறது. அனைவரையும் சிந்திக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

வெற்றிபெற்றபின், மெல்ல மெல்ல, ஆனல் நிச்சயமாக மக்களுக்கான திட்டங்களை நிறைவேற்றுவோம்" என்று பேசி முடித்தார்.

## ஔவைப் படிப்பகம்

சென்னை, டிச. 15—

ஔவைபடிப்பகத்தின்நிருவாகக் கமிட்டி உறுப்பினர் தேர்தல் கூட்டம் 13-12-59 ஞாயிறன்று நடைபெற்றது. திருவாளர்கள் மு. முத்துவீரன் தலைவராகவும், மு. துரைராசன் உதவிதலைவராகவும், மு. ஆறுமுகம் செயலாளராகவும், ஆ. முத்து பொருளாளராகவும் ஐவர் கொண்ட கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

## உலக இலக்கியத்தோடு வைத்து எண்ணத்தக்க இலக்கியம் படைக்க வேண்டும்

### அ. இ. எழுத்தாளர் மகாநாட்டில் டாக்டர் சர்.சி.பி. ராமசுவாமி அய்யர்

சென்னை, டிச. 16—

அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டின் இன்றைய நிகழ்ச்சி திரு. தாராசங்கர் பானர்ஜி தலைமையில் காலை 8-30 மணிக்கு ஆரம்பமானது.

சென்னை அரசாங்க உள்துறை அமைச்சர் திரு. பக்தவத்சலம் எல்லோரையும் வரவேற்றுப் பேசினர்.

அவரது பேச்சில் குறிப்பிட்டதாவது: பல்வேறு கருத்துடையவர்களும், வேறுபட்ட பாணியை பின்பற்றுவோரும் இங்கு கூடியுள்ளோம். நம்மில் பலர் நமது சமூக மாறுதலுக்கான போராட்டத்தில் நேரடியாகவே பங்காற்றியுள்ளோம். இம்மாறுதல்கள் நிச்சயமாக எழுத்தாளர்களின் எண்ணத்தையும், வெளியீடும் முறையையும் பெரிதும் மாற்றியுள்ளது என்ருர்.

### சி. பி. ராமசுவாமி அய்யர்

மகாநாட்டை டாக்டர் சர். சி. பி. ராமசுவாமி அய்யர் திறந்து வைத்தார். திறந்து வைத்துப் பேசுகையில் இந்திய பலங்கால இலக்கியங்கள் வளமானவை, செழுமையானவை. ஆனல் உலக இலக்கியரீதியில் வைத்து எண்ணத்தக்க இலக்கியங்கள் இந்திய மொழியில் படைக்கவேண்டும். அதற்கான ஆர்வம், உணர்ச்சி இன்று இந்திய எழுத்தாளர்களிடையே காணுகிறேன் என்ருர்.

### தாராசங்கர் பானர்ஜி

திரு. தாராசங்கர் பானர்ஜி தலைமை வகித்துப் பேசுகையில் அகில இந்திய எழுத்தாளர் மகாநாடு ஒருவகையில் ஆசிய எழுத்தாளர் மகாநாட்டின் பலனுகும். சுதந்திர கீதம்தான் எழுத்தாளனின் உணர்ச்சியாகும். ஏகாதிபத்தியத்தையும், காலனி ஆதிக்கத்தையும் எதிர்த்துப் போராடினேம். இனியும் மனித சமூகத்திற்கெதிராக வரும், சமூகப் பொருளாதார அநீதிகளையும் எதிர்த்துப் போராடுவோம் என்ருர்.

தேசிய கீதத்துடன் மகாநாட்டின் காலை நிகழ்ச்சி முடிவுற்றது.

காலை 11 மணிக்கு பிரதிநிதிகள் மகாபலிபுரம், காஞ்சிபுரம் ஆகிய இடங்களை சுற்றிப் பார்க்கப் புறப்பட்டனர். —ந.கி.

## நீர்மட்டம்

சென்னை, டிச. 16—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 15-12 | 115·6அடி |
| பெரியாறு | 14-12 | 45·3அடி |
| வைகை | 15-12 | 58·5அடி |
| பாபநாசம் | 14-12 | 144·2அடி |
| கிருஷ்ணகிரி | 15-12 | 45 7அடி |
| சாத்தனூர் | 15-12 | 99·4அடி |
| மணிமுத்தாறு | 12-12 | 100·2அடி |

## மாணவர்களை காலிகள் என்று கல்வி மந்திரி வசைமொழி

### ராஜ்ய சபையில் தோழர் பூபேஷ் குப்தா ஆட்சேபம்

புதுடில்லி, டிச. 15—

மைசூரில் சர்வகலாசாலைகள் சார்பில் நடந்த இளைஞர் விழாவின்போது மாணவர்கள் அவ்விழாவின் கலாநிகழ்ச்சிகளுக்கு இலவச அனுமதி கோரியும் விடுமுறை கோரியும் ஆர்பாட்டம் நடத்தினரென்பது தெரிந்ததே.

அதுபற்றி இன்று ராஜ்யசபையில் குறிப்பிட்டபோது கல்வி மந்திரி டாக்டர்கே. எல். ஸ்ரீமாலி மாணவர்கள் காலித்தனம் செய்ததாகக் கண்டித்தார்.

### தோழர் பூபேஷ் ஆட்சேபம்

கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் பூபேஷ்குப்தா மாணவர்களைக் காலிகளென்று கல்வி மந்திரி கண்டித்ததை வன்மையாக ஆட்சேபித்தார். அவ்விதம் பேச கல்வி மந்திரிக்கு உரிமை உண்டா என்றும் தோழர் பூபேஷ் அறைகூவினர்.

சபாநாயகர் குறுக்கிட்டு "இவ்விதம் நீர்பேசிக் கொண்டே போனல், சபை நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்கும்" என்று தோழர் பூபேஷ்குப்தாவுக்கு எச்சரித்தார்.

### போலீஸ் அட்டூழியங்கள்

முதலில் திரு.முல்கா கோவிந்த ரெட்டி (சோஷலிஸ்ட்) மைசூரில் மாணவர் கிளர்ச்சி சம்பந்தமாக இப்பொழுதுள்ள நிலைமை என்னவென்று கேட்டார். போலீசார் அட்டூழியங்கள் புரிந்ததை முன்னிட்டு நீதிபதியை நியமித்து விசாரணை நடத்தவேண்டுமென்று மைசூர் அரசாங்கத்திற்கு அறிவுறுத்த வேண்டுமென்ருர்.

சபாநாயகர்:—மைசூர் சம்பவங்கள், ராஜ்ய சட்டசபையில் விவாதிக்கப்பட்டன. இளைஞர் விழாவுக்காக ராஜ்ய சர்க்காருக்கு மான்யங்களை மத்திய சர்க்கார் கொடுத்ததென்ற காரணத்தால் அவ்விஷயத்தை இங்கே விவாதிக்க முடியாது. ஆனல், சபைக்குத் தகவல் கொடுக்கும்படி கல்வி மந்திரியை நான் கேட்டுக்கொள்கிறேன்."

கல்வி மந்திரி டாக்டர் ஸ்ரீமாலி: மக்கள்சபை கமிட்டிச் சிபாரிசுப்படியே இளைஞர் விழா இவ்வாண்டு மைசூரில் நடந்தது. எல்லா ஏற்பாடுகளையும் மைசூர் சர்வகலாசாலையே செய்தது. சில மாணவர்கள் இலவச அனுமதியும் விடுமுறையும் கோரினர். அந்தக் கோரிக்கைகளை மைசூர் சர்வகலாசாலை ஏற்றுக்கொள்வது சாத்தியமல்ல. சட்டம், அமைதி நிலவரத்தைப் பொறுத்த வரையில் மத்திய சர்க்காருக்கு எவ்வித பொறுப்புமில்லை. வெளி ஆசாமிகள் சங்கடம் விளைவித்தனர். ராஜ்ய சர்க்கார் அந்நிலையைச் சமாளித்தது. மாணவரின் காலித்தனத்தைப் பார்லிமெண்டு விவாதித்தால் ஒழுங்கு, கட்டுப்பாடு இவற்றை மீறுவதற்கு ஊக்கம் அளிப்பதாக முடியும். நமது வரலாற்றின் இந்த நெருக்கடி கட்டத்தில், இளைஞர்கள் சட்டத்தையும் ஒழுங்கையும் மதித்து நடந்தாலொழிய ஜனநாயக சமுதாயம் நிலைக்க முடியாது.

மைசூரில் சகஜ நிலைமை ஏற்பட்டிருக்கிறதென்று மைசூர் பல்கலைக்கழகதுணை வேந்தர் விடுத்த தந்தியையும் கல்வி மந்திரி வாசித்துக் காண்பித்தார்.

மாணவர்களை காலிகள் என்று கல்விமந்திரி குறிப்பிட்டபோதே, தோழர் பூபேஷ்குப்தா வன்மையாக ஆட்சேபித்தார். (பி.டி.ஐ.)

## சென்னை கரீம் பீடி கம்பெனியில் 300 தொழிலாளர் உள்ளிருப்பு போராட்டம்

### கம்யூனிஸ்ட் கட்சியின் சேவை

சென்னை, டிச. 16—

சென்னை சர்க்கார் கொண்டு வந்துள்ள பீடித் தொழிலாளர் பாதுகாப்புச் சட்டத்தை முறியடிக்க பீடி முதலாளிகள் முற்பட்டிருக்கிருர்கள். சென்னை கரீம் பீடி பாக்டரியில்காத்பாடா நெ. 3, டிப்போவில் வேலை செய்யும் 300 தொழிலாளர்கள், முதலாளிகளின் சதியை எதிர்த்து 12 12-59 முதல் உள்ளிருப்பு வேலைநிறுத்தம் செய்து வருகிருர்கள்

தொழிலாளர் தலைவர் பி கருப்பண்ணன் எம். சி.யும், 23-வது வட்டம் கொருக்குப்பேட்டை கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் வி. கே. சுப்ரமணியமும் மேற்படி டிப்போவுக்குச் சென்று நிலைமையைக் கண்டறிந்தனர். ஐக்கிய பீடித் தொழிலாளர் சங்கம் (செங்கொடி), தமிழ் நாடு பீடித் தொழிலாளர் சங்கம் (த.சோ.), ஐ என்.டி.யு.சி. ஆகிய 3 சங்கப் பிரதிநிதிகளும் லேபர் ஆபீஸரைக் கண்டு பேசினர். 18-12-59ல் சமரசம் செய்வதென முடிவாயிற்று.

கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் பி. கருப்பண்ணன் ராஜமாணிக்கம், முனியாண்டி, வி. கே. சுப்ரமணியம் ஆகியோரின் முயற்சியால் உள்ளிருப்பு வேலைநிறுத்தம் செய்து கொண்டிருக்கும் தொழிலாளர்களுக்கு 15-ம்தேதி இரவு உணவு அளிக்கப்பட்டது.

## பாக். உரிமையில்லை

புதுடெல்லி, டிச 15—

மேற்கு பாகிஸ்தானிலுள்ள ஜம்மு காஷ்மீர் சர்க்காருக்குச் சொந்தமான எந்தச் சொத்துக்களையும் விற்பனை செய்ய பாகிஸ்தானுக்கோ, ஆஜாத் காஷ்மீர் ஆட்சிக்கோ அதிகாரமில்லை என்று ஐ. நா. பாதுகாப்புக் கவுன்சிலில் இந்தியப் பிரதிநிதி எடுத்துக் கூறியுள்ளதாக மக்கள் சபையில் வெளி விவகார மந்திரியின் காரியதரிசி சாதத் அலி தெரிவித்தார்.

## வானொலி

### சென்னை 1

18—12—59

**காலை முதல் ஒலிபரப்பு**

6-55 மங்கள இசை 7-00 துதிப் பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் வானிலை அறிவிப்பு 7-15 தமிழில் செய்தி, 7-30 தேரழுந்தூர் கே. ஸ்ரீனிவாசபிள்ளை நாதஸ்வரம் (திருச்சி அஞ்சல்) 8-00 மதுரகீதம் 8-15 ஒலிபரப்பு முடிவு.

**இரண்டாவது ஒலிபரப்பு**

1-00 மாதர் நிகழ்ச்சி 1-30 கானமஞ்சரி 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 இசைச் செண்டு 2-00 தமிழில் செய்தி 2-10 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு

**மூன்ருவது ஒலிபரப்பு**

5-30 கிளாரினெட் ஆ. இ. ரே. வித்வான் 5-45 காந்தி சர்ச்சை (திருச்சி அஞ்சல்) 6-00 பஜனை 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் (திருச்சி அஞ்சல்) 7-15 தமிழில் செய்தி, 7-30 சித்தூர் சுப்ரமணிய பிள்ளை பாட்டு, பி.கே. விஸ்வநாத சர்மா வயலின் ஸி. எச். சியாம்சுந்தர் மிருதங்கம் 9-00 வாத்யகோஷ்டி 9-15 கதம்பம் 9-30 மெல்லிசை மெட்டுகள் (சென்னை மெல்லிசை பகுதி தயாரித்தது) 9-45 டி. கே. பட்டம்மாள் 10-30 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

### திருச்சி

18—12—59

**காலை முதல் ஒலிபரப்பு**

7-00 இசைக்கதிர் திருப்பாவை திருவெம்பாவை 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் 7-15 தமிழில் செய்தி 7-30 தேரழுந்தூர் கே. ஸ்ரீனிவாச பிள்ளை நாதஸ்வரம் 8-00 ஆங்கிலத்தில் செய்தி 8-15 ஒலிபரப்பு முடிவு.

**இரண்டாவது ஒலிபரப்பு**

1-00 மாதர் நிகழ்ச்சி (சென்னை 1ல் உள்ளபடி) 1-30 வாத்ய இசை 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 குரல் இசை 2-00 தமிழில் செய்தி 2-10 சிதம்பரம் டி. நடராஜன் பாட்டு 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

**மாலை மூன்ருவது ஒலிபரப்பு**

4-45 விவித பாரதி கர்நாடக சங்கீத நிகழ்ச்சி (பம்பாய் அஞ்சல்) 5-45 காந்தி சர்ச்சை 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் 7-15 தமிழில் செய்தி 7-30 சித்தூர் சுப்ரமணிய பிள்ளை பாட்டு (சென்னையில் உள்ளபடி) 9-00 ஆங்கிலத்தில் செய்தி 9-15 ஒலிப்பதிவுகள் 9-30 மெல்லிசை மெட்டுகள் (சென்னை 1ல் உள்ளபடி) 9-45 என். ஸி. வசந்த கோகிலம் 10-00 ஒலிபரப்பு முடிவு.

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் என். கிருஷ்ணசாமி
ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.
32, பிராட்வே, சென்னை-1,
Janasakthi
Broadway, Madras-1.